4 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண் எம். 8798.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 11) மதுரை 4-5-73 வெள்ளி (மலர் 103

## விடுதலையான பாதுகாப்பு கைதிகள் மீண்டும் கைது

ஜல்பைகுரி, ஏப். 29—

உள் நாட்டுப் பாதுகாப்பு பராமரிப்புச் சட்டத்தின் 17-(ஏ) பிரிவு செல்லாது என்று சுப்ரீம் கோர்ட் தீர்ப்பளித்ததையடுத்து ஜல்பைகுரி சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்ட பாதுகாப்பு கைதிகள் 8 பேர் மீண்டும் அன்றைய தினத்திலேயே கைது செய்யப்பட்டு சிறையிலடைக்கப்பட்டுள்ளனர்.

இந்திரா காந்தியின் ஜனநாயகம் மேற்கு வங்கத்தில் அமுலாகுது.

## அலுமினியக் கம்பெனியும் தி. மு. க. போஸ்டரும்

சென்னை, மே. 3—

மேட்டூரிலுள்ள சென்னை அலுமினியத்தொழிற்சாலை (மால்கோ) யை நாட்டுடைமையாக்க தமிழக அரசு உத்தேசித்திருந்தது.

ஆனால் மத்திய அரசு அலுமினியத் தொழிற்சாலையை நாட்டுடைமையாக்க விடாமல் தனது அதிகாரத்தைப் பயன்படுத்தித் தடுத்து நிறுத்தும் என்று மத்திய அமைச்சர் சி. சுப்பிரமணியம் தெளிவாக அறிவித்துள்ளார்.

உண்மை இவ்வாறு இருக்க மேட்டூர் அலுமினியக் கம்பெனியை அரசுடைமையாக்கியிருப்பதாக தி.மு.க போஸ்டர் போட்டுள்ளது; அதன் சாதனையா? திண்டுக்கல் வேதனையா?




# அ. தி. மு. க. வேட்பாளருக்கு ஆதரவு பெருகுகிறது

## திண்டுக்கல் தொகுதியெங்கும் மக்கள் உற்சாகம்

## மேதினக் கூட்டத்தில் ஏ. பாலசுப்ரமண்யம் பேச்சு

**மதுரை, மே. 2—**

**திண்டுக்கல் உபதேர்தலில் அ. தி மு. க. வேட்பாளர் வெற்றி பெறுவார் என்றும், இந்த வெற்றி இடதுசாரி ஜனநாயக அணி வளருவதற்கான வழியைத் திறந்துவிடும் என்றும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலச் செயலாளர் தோழர் ஏ. பாலசுப்ரமண்யம் நம்பிக்கை தெரிவித்தார்.**

**மே தினத்தையொட்டி நேற்று இங்கு திலகர் திடலில் நடைபெற்ற பிரம்மாண்டமான பொதுக் கூட்டத்தில் அவர் பேசினார்.**

**சென்ற மேதினத்தின்போது இருந்த நிலைமையிலிருந்து தமிழ் நாட்டில் மாறிய, புதிய நிலைமை தோன்றியிருப்பதையும் அவர் விளக்கினார்.**

அவருடைய பேச்சு வருமாறு:—

திண்டுக்கல் தொகுதியை சுற்றிப் பார்த்ததிலிருந்து அ. தி. மு. க. வேட்பாளர் வெற்றி பெறுவார் என்ற திடமான நம்பிக்கை எனக்கு ஏற்பட்டுள்ளது.

நான் பேசிய பொதுக் கூட்டங்களில் பல்லாயிரக் கணக்கான மக்கள் உற்சாகத்துடன் அணி திரண்டிருப்பதைப் பார்த்தேன்.

### கண்கூடான உண்மை

அ. தி. மு. க, வேட்பாளருக்கு ஆதரவு தெரிவிக்கும் பொதுக் கூட்டங்களுக்கு லட்சக்கணக்கான மக்கள் கூடுகின்றனர். திண்டுக்கல்லில் எம். ஜி. ஆரும், நானும் மற்ற கட்சித் தலைவர்களும் பேசிய கூட்டத்துக்கு மக்கள் திரண்டு வந்ததைப் போல் அண்மையில் வேறெந்தக் கூட்டத்துக்கும் மக்கள் கூடியதில்லை. இந்த கண்கூடான உண்மையைத்தான் தி. மு. க. அமைச்சர் ராசாராம் பார்க்க மறுத்து, அ. தி. மு. க. வுக்கு கிளையே இல்லை என்று பேசி இருக்கிறார்.

அதேசமயம்அங்கு, தி.மு. க. அமைச்சர்கள் பேசுகிற கூட்டங்களுக்கு நூறு பேருக்கு மேல் கூடக் காணோம்.

முதலமைச்சர் கருணாநிதி பேசிய வத்தலக்குண்டு பொதுக்கூட்டத்துக்குக்கூட மக்கள் திரண்டு வரவில்லை. அந்தக் கூட்டத்தில் முதலமைச்சர் "உங்கள்ஓட்டுயாருக்கு?" என்று கேள்வி கேட்டபோது நடந்ததென்ன? ஆயிரம் பேருக்குமேல் எழுந்து "அ தி மு க வுக்கே எங்கள் ஓட்டு" என்று கோஷம் எழுப்பியிருக்கின்றனர். இதைப் பார்த்து ஏமாற்றமடைந்த முதலமைச்சர் கருணாநிதி கோஷம் எழுப்பியவர்களைப் பார்த்து "உங்களுக்கெல்லாம் ஓட்டில்லை" என்று கூறியிருக்கிறார். வத்தலக்குண்டில் முதலமைச்சர் கண்முன்பே நிகழ்ந்த இந்தச் சம்பவம் எந்தப் பக்கம் காற்றடிக்கிறது என்பதைக் காட்டுகிறது.

### இடிந்து நொறுங்கும் தி. மு. க.

இந்தச் சூருவளி காற்றில் தி மு க இடிந்து நொறுங்கிக் கொண்டிருக்கிறது.

சென்ற ஆண்டில் தி. மு. க. இருந்த நிலை என்ன? இப்போதைய நிலை என்ன? சென்ற ஆகஸ்ட் மாதத்தில் இதே மதுரை பட்டினத்தில் தி மு க எவ்வளவு பெரிய ஊர்வலம் நடத்தியது. மேலமாசி வீதியிலேபிரம்மாண்டமான உலக உருண்டை அமைத்து வரவேற்பு வளையங்கள் எல்லாம் அமைத்திருந்தார்கள். அந்த உலக உருண்டை விழுந்து நொறுங்கியதைப் போலவே தி மு க வும் நொறுங்கிக் கொண்டிருக்கிறது. யார் வந்தாலும் இனி தி மு க வைக் காப்பாற்ற முடியாது.

அவர்களிடம் இருக்கும் எம். எல். ஏக் களை வைத்து கொண்டு இந்திரா அனுமதிக்கும் வரை ஆட்சியை நடத்தலாம் என்று பார்க்கிறார்கள்.

### இந்திரா காங்கிரசுக்கு ஆள் இல்லை

திண்டுக்கல் தொகுதியில் இந்திரா காங்கிரசுக்கு ஆள் இல்லை.

திண்டுக்கல் நகரில் தேர்தல் வேலைக்கு பெரிய மாளிகையை பிடித்து வைத்துள்ளார்கள். ஆனால் வேலை செய்யத் தொண்டர்கள் தான் இல்லை. 35 ஜீப்புகள் அங்கு எருமை மாடு மாதிரி நின்று கொண்டிருக்கின்றன. அந்த ஜீப்புகளைப் பயன் படுத்துவதற்குக் கூட ஆள் இல்லை.



இந்திரா காங்கிரஸ் பொறுப்புத் தொகையை இழக்கப் போவது உறுதி. இந்திரா காங்கிரசுக்கு ஓட்டுக் கேட்க 10 மத்திய அமைச்சர்கள் வரப் போகிறார்களாம்,

மோகனும், சுப்பிரமணியமும் ஏற்கனவே தேர்தல் களத்தில் குதித்திருக்கிறார்கள்.

தி. மு: க. அரசின் லஞ்ச ஊழலை விசாரிக்க, விசாரணைக் கமிஷன், அமைக்க தங்களுக்குத்தான் அதிகாரம் இருக்கிறது என்று சுப்பிரமணியம்பேசியிருக்கிறார். எம். ஜி. ஆர்.சபதம் சினிமா சபதம் என்றும், கிண்டல் செய்கிறார்கள்.

விசாரணைக் கமிஷன் அமைப்பதைக் கூட காங்கிரஸ் அமைச்சர்கள் ஓட்டு வாங்குவதற்கு பயன்படுத்தப் பார்க்கிறார்கள். அக்கிரமம் நடந்திருப்பதைக்கண்டு விசாரணைக் கமிஷன் அமைக்க மத்திய அமைச்சர்கள் முன்வரவில்லை. விசாரணைக் கமிஷன் அமைக்க வேண்டுமா காங்கிரசுக்கு ஓட்டுப் போடு என்று கேட்கிறார்கள்.

### சிண்டிகேட்-தி.மு.க.வின் எரிச்சல்

திண்டுக்கல் தொகுதியில் சிண்டிகேட்டுக்கும் செல்வாக்கில்லை. அதனுடன் கூட்டு சேர்ந்த சுதந்திரா கட்சியும் இங்கு கலைக்கப்பட்டுள்ளது.

இந்த நிலையில் அ தி மு க வேட்பாளர்தான் வெற்றி பெற முடியும்.

அ தி மு கவுக்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஆதரவளிப்பதைப் பார்த்து தி மு க வும், சிண்டிகேட் காங்கிரசும் ஆத்திரமடைந்து பேசுகிறார்கள்.

ராமமூர்த்தி 4 லட்சம் வாங்கிக்கொண்டு விட்டார் என்றும், ராமமூர்த்தியின் மகன் கல்யாணத்துக்கு 1 லட்சம் வாங்கியிருக்கிறார் என்றெல்லாம் அவர்கள் ஆத்திரத்தில் பேசுகின்றனர். ராமமூர்த்திக்கு மகன் கிடையாது என்பதைக்கூடத் தெரியாமல் பேசுகின்றனர். அவர்களுக்குக் கமிஷன் வாங்கியே பழக்கம். இங்கிலையில் கொள்கை ஒன்றையே முன் வைத்து செயல்பட்டு வரும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைப்பற்றி அவர்கள் வாய்க்கு வந்தபடி பேசிக் கொண்டிருக்கின்றனர்.

சிண்டிகேடும், இண்டிகேடும இந்தியாவின் சாபக்கேடு என்பதே மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அசைக்க முடியாத கொள்கை. அந்தக் கொள்கையிலிருந்து இம்மிகூட இப்போது அது விலகவில்லை.

காங்கிரசுடன் அ.தி.மு.க. சேரக்கூடாது என்றுநான் ஆரம்ப முதல் நாங்கள் கவலைப்பட்டு வந்தோம். கூவம் நாற்றத்தைவிட யமுனையின் நாற்றம்அதிகம் என்று நாங்கள் எடுத்துக் கூறினோம். மாருதி ஊழல்,

(4-ம் பக்கம் பார்க்க)

## காங்கிரசாருக்கு ஒரு சட்டம் எதிர்கட்சிகளுக்கு ஒரு சட்டமா?

### கவர்னருக்கு தோழர் ஜோதிபாசு கடிதம்

கல்கத்தா, ஏப். 30—

மேற்கு வங்கத்தில் மார்க்சிஸ்ட் கட்சி ஊழியர்களும், ஏனைய எதிர் கட்சி ஊழியர்களும் லாரிகளில் கூட்டங்களுக்குச் செல்ல அனுமதிக்கப் படுவதில்லை. ஆனால் அதே சமயத்தில் காங்கிரஸ் தொண்டர்களும் குண்டர்களும் லாரிகளில் கூட்டங்களுக்கு செல்ல அனுமதிக்கப் படுகிறார்கள். அவர்களின் மீது ஒரு வித நடவடிக்கையும் எடுக்கப் படுவதில்லை. இது பற்றி தோழர் ஜோதிபாசு மேற்கு வங்க கவர்னர் டயசுக்கு எழுதிய கடிதத்தின் சுருக்கம் வருமாறு:—

உயர்திரு டயஸ் அவர்களே! மேற்கு வங்கத்தின் பிரபல பத்திரிகையான 'சத்யயுக்' ஏட்டின் மார்ச் 25.ம் தேதிய இதழை இக் கடிதத்துடன் இணைத்துள்ளேன். அப்பத்திரிகையில் கல்கத்தாவிலுள்ள 'பிரிகேட் பாரேட்' மைதானத்தில் மார்ச் 24-ம் தேதி நடைபெற்ற காங்கிரஸ் பொதுக் கூட்டத்தில் கலந்து கொள்ள ஏராளமானோர் லாரிகளில் வந்த படம் பிரசுரமாகியுள்ளது.

ஆனால் ஓராண்டிற்கு முன்பு ஜனாதிபதிஆட்சியின் கீழ் தேர்தல் நடைபெறுவதற்கு சில நாட்கள் முன்பு உங்களுக்கு ஒரு கடிதம் எழுதினேன், அக்கடிதத்தில் எங்கள் கட்சியைச் சேர்ந்தவர்கள் லாரிகளில் கூட்டத்திற்கு வரும் போது தடுத்து நிறுத்தப்பட்டது. அத்தோடு நில்லாமல் அந்த லாரிகளை ஓட்டி வந்த டிரைவர்களின் மீதும் வழக்கு பதிவு செய்யப்பட்டது பற்றியும் குறிப்பிட்டிருந்தேன்.

ஆனால் அக்கடிதத்திற்கு தாங்கள் எழுதிய பதிலில் லாரிகளில் பொதுமக்களை ஏற்றிச்செல்வதற்கு சட்டப்படி தடை விதிக்கப்பட்டுள்ளது என்று குறிப்பிட்டிருந்தீர்கள்.

தங்களின் பதில் கிடைக்கப்பெற்ற சில நாட்களுக்குப்பின் காங்கிரஸ் கூட்டத்திற்கு தொண்டர்களை லாரிகளில் ஏற்றிச் சென்றது— அந்த லாரிகளின் நம்பர்கள் உட்பட அனைத்து விபரங்களுடன் விரிவாக மீண்டும் ஒரு கடிதம் எழுதினேன். அதற்கு தாங்கள் எழுதிய பதிலில் அந்த லாரிகளின் மீது தக்க நடவடிக்கை எடுக்கப்படும் என்று வாக்களித்திருந்தீர்கள்.

### எழுதப்படா சட்டம்

ஆனால் தற்போது மேற்கு வங்கத்தில் சட்டப்புத்தகத்தில் எழுதப்படாத ஒரு சட்டம் அமுலிலிருப்பது போல் தெரிகிறது. அதாவது காங்கிரஸ் கட்சிக் காரர்கள் வேண்டுமானால் லாரிகளில் ஏறிச் செல்லலாம். அதற்கு அனுமதி உண்டு. ஆனால் மற்ற எதிர்கட்சிக்காரர்கள் லாரிகளில் ஏறிச் செல்ல அனுமதி கிடையாது. அப்போது மட்டும் சட்டம் குறுக்கே வருகிறது. மேற்கு வங்கத்தில் இன்று சட்டம் படும்பாட்டிற்கு இது ஒரு உதாரணம்.

ஆனால் இன்றைக்கு மேற்கு வங்கத்தில் எதிர்க் கட்சிகளின் மீது ஏவி விட்டுள்ள அடக்குமுறை தாண்டவத்தைஒப்பிடும் போதும், அவர்களது அடிப்படை ஜனநாயக உரிமைகளே பறிக்கப்பட்டுள்ள நிலையை ஒப்பிடும்போது இது மிக மிகச் சாதாரணமான விஷயமே.

ஆனால் இந்த லாரி பிரச்சினையில் உங்களது கருத்தை அறியவே இக்கடிதத்தை தங்களுக்கு எழுதியுள்ளேன் என்று தோழர் ஜோதிபாசு தனது கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார்.

தோழர் ஜோதிபாசு கடிதத்திற்கு ஏப்ரல் 10-ம் தேதி மேற்குவங்ககவர்னர் டயஸ் அளித்த பதிலில் தங்களது கடிதத்திலுள்ள விஷயங்களை முதலமைச்சருக்கு எழுதி தக்க நடவடிக்கை எடுக்குமாறு வலியுறுத்தியுள்ளேன் என்று குறிப்பிட்டுள்ளார்.

ஆனால்மேற்குவங்கஅரசு, இதுவரை தோழர் ஜோதிபாசு எழுப்பியுள்ள கேள்விக்கு பதிலளிக்காமல் மௌனம் சாதித்து வருகிறது.

## கருணாநிதியின் முதலைக் கண்ணீர்

"கம்யூனிஸ்ட் தொண்டர்களே, சமதர்மத் திட்டங்களை நிறைவேற்றி வரும் இந்த ஆட்சி ஒழிய வேண்டும் என்று கூறினோம். உங்கள் தலைவர்களிடம் கேளுங்கள். நாம் எந்த லட்சியங்களுக்காகப்போராடினோமோ அந்த லட்சியங்கள் தி. மு. க. ஆட்சியால் நிறைவேற்றப்படும்போது ஏன் அதை ஒழிக்க வேண்டும் என்று கேளுங்கள்"

முதலமைச்சர் மு. கருணாநிதி சென்னையில் நடந்த மே தின விழாவில் பேசியது.

நல்ல கேள்வி கேட்டீர்களய்யா!

சிம்சனில் சைக்கிள் செயினும்,

விம்கோவில் துப்பாக்கிச்சூடும்,

அரவங்காட்டில் படுகொலையும்,

நெய்வேலியில் போலீஸ் நீசத்தனமாம்!

மூங்கில்துறைப்பட்டில் தி. மு. க. வினரின் ரவுடிஸமும்,

நீங்கள் தொழிலாளர்களுக்காக அமுல் நடத்தி வரும் 'சமதர்ம'த் திட்டங்களின் பகுதிகள்தானே?

தமிழ்நாட்டு முதலாளிகளைப்—பாதுகாத்துவரும் முதலாளிகளின் ஏஜெண்டுகளாகச் செயல்பட்டு வருபவர்கள் வடிக்கிறார்கள்.

திண்டுக்கல் தேர்தலுக்காக முதலைக் கண்ணீர்!

## கள்ளக் கடத்தல்காரனுக்கு சிபாரிசு கடிதம் கொடுத்தவர் கவர்னர் ஆனார்

புதுடில்லி, மே, 1—

கவர்னர் பதவி போன்ற நியமனங்களை நாடாளுமன்றம் தணிக்கை செய்வது அவசியம் என்று நாடாளுமன்றத்தில் சோஷலிஸ்ட் கட்சித் தலைவர் மதுலிமாயி பேசுகையில் வற்புறுத்தினார்.

பீகாரிலும், குஜராத்திலும் கவர்னராக இருந்த நித்யானந்த கனுங்கோவுககு எதிராக நீதிமன்றத் தீர்ப்பிலேயே கண்டனம் வந்திருப்பதைச் சுட்டிக்காட்டி அவர் இவ்விதம் கோரினார்.

பம்பாயிலுள்ள ஒரு பெரிய கடத்தல் பேர்வழிக்கு கனுங்கோவின் சிபாரிசுக் கடிதத்தின் பேரில்பாஸ்போர்ட்வழங்கப்பட்டது பற்றி தாம் 1970-ம் ஆண்டிலேயே குற்றச்சாட்டு எழுப்பியதையும் இந்தக் குற்றச்சாட்டு சம்பந்தமாக கனுங்கோவிடம் விளக்கம் கேட்பதாக அப்போது பிரதம மந்திரி வாக்குறுதி அளித்ததையும் மதுலிமாயி நினைவுறுத்தினார்.

### கவர்னரின் பொய்

கனுங்கோவிடம் விளக்கம் கேட்டபோது தன்னுடைய கையெழுத்து மாதிரி யாரோ பொய்க்கையெழுத்து போட்டு விட்டதாக கனுங்கோ விளக்கம் கொடுத்திருந்ததையும், அதன்பேரில் பொய்க் கையெழுத்து போட்டவர் மீது வழக்குத் தொடுக்க வேண்டும் என்று அப்போதே தாம் கோரியிருந்ததையும் மதுலிமாயி சபையில் நினைவுபடுத்தினார்.

மதுலிமாயி மேலும் கூறியதாவது :—

முடிவில் இரண்டுமாதங்களுக்குமுன் அரசாங்கம் விஷயத்தை நீதிமன்றத்துக்குக் கொண்டு சென்றது. நீதிபதி தன்னுடைய தீர்ப்பில் கனுங்கோ முழுக்க முழுக்க பொய் சொல்லியிருப்பதாகக் கூறியுள்ளார்.

இங்கிலையில் கவர்னர் பதவி போன்ற நியமனங்களுக்கு நாடாளுமன்ற தணிக்கை அவசியமாகும் எனக் கூறினார்.

## இண்டி—சிண்டி—தி மு க. சோஷலிசம்

### வெளிநாட்டுக்கு சீனி கிலோ ரூ. 1-05
### உள் நாட்டுக்கு சீனி கிலோ ரூ. 4-00

சீனி விலை ரூ1-05 எங்கே? எங்கே? என்று பையை எடுத்துக் கொண்டு கடையைத் தேடாதீர்கள். இந்தியாவில் உற்பத்தியானசீனி லண்டனில் ரூ1-05க்கு விற்கப்படுகிறது.

ஏன் என்று கேட்கிறீர்களா?

இந்திரா அம்மையாரைத்தான் கேட்கவேண்டும். உள்ளூரில் கிலோ ரூ4, வெளிநாட்டில் ரூ 1-05 காசுக்கு விற்கிறார்கள். இதனால் ஏற்படும், வித்தியாசத்தை நமது வரிப்பணத்திலிருந்துகொடுக்கிறார்கள். இதில்வேடிக்கை என்ன தெரியுமா?

இந்திய முதலாளிகள், 1967-ம் ஆண்டு 18 கோடிக்கு சீனி ஏற்றுமதி செய்தார்கள் அரசாங்கம் அவர்களுக்கு விலையில் ஏற்பட்ட வித்தியாசத்திற்காக மட்டும் கொடுத்தது ரூ 20 கோடி.

தீக்கதிர்

# உணவு நெருக்கடிக்கு யார் பொறுப்பாளி?

நாட்டின் பல பாகங்களில் பஞ்சம் தலைவிரித்தாடும் நிலைமை தோன்றியுள்ளது பாப்பாய் போன்ற நகரங்களில் 1 கிலோ கோதுமை ரூ 5-க்கு விற்கப்படுகிறது.

மகாராஷ்டிர மாநிலத்தில் கடுமையான தட்டுப்பாடு ஏற்பட்டும் உணவு சப்ளை விரைந்து செய்யப்படவில்லை. 27 ஆயிரம் பங்கீட்டுக் கடைகள் மூலம் உணவு வினியோகிப்பதற்கு 2 லட்சத்திலிருந்து 2 லட்சத்து 83 ஆயிரம் டன் வரை தானியம் தேவைப்பட்டிருந்தும் கடந்த ஜனவரியிலிருந்து மகாராஷ்டிர மாநிலத்துக்கு கிடைக்கும் ஒதுக்கீடு 1 லட்சத்து 48 ஆயிரம் டன்னிலிருந்து 1 லட்சத்து 68 ஆயிரம் டன் வரையிலேயேயிருந்தது.

இந்த நிலையில் மாதத்துக்கு நபர் ஒன்றுக்கு 7 கிலோ தானியம் கொடுக்கப்பட்டுவந்த அளவு 5 கிலோவாகக் குறைக்கப்பட்டது, ஏப்ரல் முதல் வாரத்தில் ஒழுங்கான சப்ளை இல்லாததின் காரணமாக இந்தக் குறைந்த அளவு தானியமும் பங்கீட்டுக் கடைகளில் கிடைக்கவில்லை.

இதனால் ஆத்திரமடைந்த மக்கள் தெருக்களில் இறங்கி ஆர்ப்பாட்டம் செய்தனர், பட்டினி கிடக்க முடியாமல் கடைகளில் இருக்கும் ஸ்டாக்குகளை வினியோகிக்கக் கோரி இவ்வாறு ஆர்ப்பாட்டம் செய்த மக்களைத் தான் உணவுக் கலகக்காரர்கள் என்ற பெயரைக் காங்கிரஸ் அரசு சூட்டியுள்ளது.

நாசிக், நாகபுரி போன்ற இடங்களில் நடந்திருக்கும் இந்தக் "கலகங்கள்" நாட்டின் உணவு நிலைமை எவ்வளவு பயங்கரமாகியுள்ளது என்பதைப் படம் பிடித்துக் காட்டுகிறது.

ராஜஸ்தானில் 1½ கோடி மக்கள் கடுமையான பஞ்சத்தில் சிக்கியுள்ளனர். மாதத்துக்கு நபர் ஒன்றுக்கு ஒரு கிலோவிலிருந்து 6 கிலோ வரை மக்களுக்கு தானியம் வினியோகிக்கப்படுகிறது. மத்திய அரசு போதிய ஸ்டாக்குகளை அனுப்பாததின் காரணமாக இந்தக் குறைந்த அளவு தானியமும் மக்களுக்கு கிடைக்கவில்லை. ஜெய்ப்பூர் போன்ற நகரங்களில் மார்க்கெட்டில் கோதுமை விலை ஒரு குவிண்டால் ரூ 125 ஆக உயர்ந்துள்ளது.

மத்திய பிரதேசத்தில் 250 நகரங்களில் 11 ஆயிரம் நியாய விலைக் கடைகள் மூலம் 67 லட்சம் மக்களுக்கு உணவு வினியோகம் செய்வதற்கு போதிய ஸ்டாக் இல்லை. இந்நிலையில் நபர் ஒன்றுக்கு-மாதம் ஒன்றுக்கு ஒன்று அல்லது இரண்டு கிலோ கோதுமை கூட சப்ளை செய்யமுடியவில்லை என்று அரசாங்கமே ஒப்புக் கொண்டிருக்கிறது.

குஜராத் மாநிலத்தில் கடுமையான தட்டுப்பாடு ஏற்பட்டு மட்டமான கோதுமையின் விலை கூட குவிண்டால் ரூ 130 ஆக உயர்ந்துள்ளது.

இம்மாதிரியே மற்ற மாநிலங்களின் நிலைமையும் உள்ளது.

நாட்டில் பசுமைப் புரட்சி செய்திருப்பதாகப் பிரச்சாரம் செய்த காங்கிரஸ் ஆட்சி மக்களுக்கு அரைவயிற்றுக்குக் கூட உணவு சப்ளை செய்யாமல் நாட்டின் பல பாகங்களில் பட்டினிச் சாவுகள் ஏற்பட்டிருக்கின்றன.

இந்தப் பஞ்சம் காங்கிரஸ் ஆட்சி சிருஷ்டித்த பஞ்சம் என்பதில் சந்தேகமில்லை.

உணவு விலையேற்றத்தை எதிர்த்து நாட்டின் பல பாகங்களில் கிளர்ச்சி மூண்டதைத் தொடர்ந்துவேண்டா வெறுப்பாக கோதுமை மொத்த வியாபாரத்தை அரசே மேற்கொண்டிருப்பதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

கோதுமை மொத்த வியாபாரத்தை அரசு மேற்கொண்டு ஒரு மாதமாகியும் போதிய ஸ்டாக் கையிருப்பில்லை என்று இப்போது அறிவிக்கிறது.

போதிய ஒதுக்கீடு வந்துசேரவில்லை என்று மாநில அரசுகள் புகார் கூறும்போது வறட்சி மாநிலங்களுக்கு உணவு சப்ளை செய்யப்பட்டதின் காரணமாக கையிருப்பு மிகவும் குறைந்துவிட்டது என்று மத்திய அரசு அறிவிக்கிறது. 1972 ஜூலையில் 90 லட்சம் டன்னாக இருந்த கையிருப்பு அக்டோபரில் 50 லட்சம் டன்னாகக் குறைந்து இப்போது மேலும் குறைந்துவிட்டதாக அறிவிக்கப்படுகிறது.

இந்த நிலைமையில்தான் உள்நாட்டு உணவுத் தேவையைப் பூர்த்தி செய்வதற்கு இறக்குமதி செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் அரசுக்கு ஏற்பட்டுள்ளது. உணவு உற்பத்தியில் தன்னிறைவு பெற்றுவிட்டோம் என்று பெருமையடித்த காங்கிரஸ் அரசு கோழிக்குஞ்சுக்கு கொடுக்கும் அளவிலான உணவு பங்கீட்டைக்கூட உறுதி செய்ய முடியாமல் 20 லட்சம் டன் தானியத்தை இறக்குமதி செய்வதற்கு ஏற்கனவே நடவடிக்கை எடுத்துள்ளது.

இந்த ஆண்டு "ராபி" பருவ விளைச்சல் 150 லட்சம் டன் கூடுதலாகக் கிடைக்கும் என்றும், நிலைமையைச் சமாளிக்க முடியும் என்றும் உறுதி கூறிய அமைச்சர்கள் இப்போது தங்களுடைய புள்ளி விவரம் பொய்த்து விட்டது என்று கூறுகிறார்கள் சில வாரங்களுக்கு முன் அதிகபடியான விளைச்சல் 62.4 லட்சம் டன்னாக இருக்கும் என்று அமைச்சர்கள் மதிப்பிட்டார்கள். கடைசியாக அவர்கள் செய்திருக்கும் மதிப்பீடு 40 லட்சம் டன்.

நிலச்சுவான்தார்களிடமிருந்து போதிய தானியத்தைக்கொள் முதல் செய்யத் தவறியிருக்கும் கையாலாகத்தனத்தை மறைப்பதற்கு புள்ளி விவரங்களை மாற்றி மாற்றி கூறி அமைச்சர்கள் சித்து விளையாடிக்கொண்டிருக்கின்றனர்.

இந்நிலையில் மாநிலங்களுக்கு உணவு சப்ளை அனுப்புவது குறைந்துகொண்டே போவதில் ஆச்சரியமில்லை அல்லவா?

கோதுமை அறுவடையாகி மார்க்கெட்டுக்கு வரும் மாதங்களிலேயே இந்த நிலைமை என்றால் பற்றாக்குறை மாதங்களில் நிலைமை எப்படியாகும் என்றும் கூற வேண்டியதில்லை

உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்காக ரூ. 300 கோடி செலவிட்டு ரூ. 150 கோடி கடனாக கொடுத்தும் ரூ. 150 கோடி சிறியபாசனத்திட்டங்களுக்கு செலவிட்டும் அவசர காலத் திட்டத்தை நிறைவேற்றியிருப்பதாக அரசாங்கம் அறிவிக்கிறது

இந்தத் திட்டத்தை நிறைவேற்றிய பிறகும் மக்களுக்கு உணவு கிடைக்காமல் பட்டினிச் சாவுகள் ஏற்பட்டுள்ளன. உணவு கோரி ஆர்ப்பாட்டம் செய்பவர்கள் மீது துப்பாக்கிச் சூடுகள் நடைபெற்றுள்ளன.

கடைசியாக 70 லட்சம் டன் தானியத்தை இறக்குமதி செய்ய இந்திய அரசு தீர்மானித்திருப்பதே அதன் திட்டங்கள் எல்லாம் தோல்வியடைந்திருப்பதையே காட்டுகிறது.

# பசுமைப் புரட்சியா? பஞ்சம் வறட்சியா?

## சிறு விவசாயிகளைப் புறக்கணித்ததால் வந்த வினை பற்றி தோழர் பி. என். ரெட்டி

புதுடெல்லி, ஏப். 30 –

**"இந்தியாவில் உணவு நெருக்கடி ஏன் ஏற்பட்டது? என்று கேட்டால்—அக்கேள்விகளுக்கு ஆட்சியாளர்கள் கொடுக்கும் பதில் என்ன? பசுமை கொழிப்பதற்கு பருவமழை பெய்யவில்லை என்று பதில் சொல்லுகிறார்கள்,**

**தங்களுடைய கையாலாகாத்தனத்தை மூடி மறைப்பதற்காக, கடந்த 25 ஆண்டுகளாக, இப்படித்தான் கடற்காற்று அடிக்கவில்லை, கால மழை பெய்யவில்லை என்ற சாக்கைச் சொல்லிக்கொண்டே வருகிறார்கள்"— என்றும், விவசாயத்துறையில் அரசாங்கம் கடைப்பிடிக்கும் நிலப்பிரபுத்துவ ஆதரவுக்கொள்கையைக்கண்டித்தும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர் பி. என். ரெட்டி பேசினார்.**

உணவு, விவசாய அமைச்சகத்துக்குமான்யம் கோரி தீர்மானம் வந்த போது நாடாளுமன்றத்தில் தோழர் பி. என். ரெட்டி பேசினார்.

அவர் தொடர்ந்து பேசியதாவது:-

"நாட்டின் இன்றைய உணவுநிலை என்ன? அமெரிக்காவிலிருந்து மீண்டும் உணவுதானியத்தை இறக்குமதி செய்யத் தொடங்கிவிட்டது உணவு அரங்கில் தன்னிறைவை எட்டிவிடுவோமென்று ஓயாது பாடிவந்த பாட்டு எங்கே? இன்று நாட்டின் பெரும் பகுதியில் பஞ்சம் தாண்டவமாடுகிறது. வறட்சியின் பிடியிலே நாடு சிக்கிக் கிடக்கிறது

10 கோடி டன் தானியம் உற்பத்திசெய்து விடலாமென்று அரசாங்கம் போட்ட திட்டமெல்லாம் கவிழ்ந்துவிட்டது.

வைத்த குறி தவறிவிட்டதால், அன்னிய நாடுகளிலிருந்து தொடர்ந்து தானியம் இறக்குமதி செய்த வண்ணம்தான் இருக்கிறோம். இந்த நிலையில தன்னிறைவு லட்சியம் தவிடுபொடியாகிவிட்டது, சோசலிஸமும்—சரீபிஹட்டோவும் சோக நாடகமாகிவிட்டது இந்த ஆண்டின் சித்திரம் இது.

### போன ஆண்டிலே பீத்தியது என்ன?

போன வருட பட்ஜெட்டின்போது மனங்கெட்ட மந்திரி பக்ருதீன் அலி அகமது என்ன பீத்தினார்? இதோ, கேளுங்கள்!

'நாட்டின் பல பகுதிகளில் கால நிலை சரியில்லாவிட்டாலு - மகாராஷ்டிராவிலும் — ஆந்திர பிரதேஷிலும் - மைசூரிலும் வறட்சி ஏற்பட்டிருந்த லுங்கூட— பீகாரிலும் உத்தரப் பிரதேஷிலும், மேற்கு வங்காளத்திலும் வெள்ளச் சேதங்கள் ஏற்பட்டிருந்தாலும்கூட — ஒரிசாவில் புயல் அடித்தாலும்கூட நமது நாட்டிலே 12 கோடி முதல் 13 கோடி டன்கள் வரை தானிய விளைச்சல் கிடைக்கும் என்று நம்புகிறேன்"என்று கூறினார்.

### அதுமட்டுமா?

மந்திரி சொன்னது அது மட்டுமா? மேலும் சொன்னார்.

"ஐந்து ஆண்டுகளுக்கு முன்னேயே நாம் பிரகடனம் செய்தோம். வெளி நாடுகளிலிருந்து தானிய இறக்குமதி இருக்கவே இருக்காது என்று, அந்த சத்தியத்தை நிறைவேற்றி விட்டோம் என்றும் பீத்தினார்.

நான் கேட்கிறேன். மந்திரி சொன்ன கணக்கு சரிதானா? போட்ட கணக்கு முற்றிலும் பொய்க் கணக்கு என்பதும், அரசாங்கம் குறிக்கோளை அடைவதில் தவறிவிட்டது என்பதும தெரியவில்லையா?

பருவமழை என்ற ஒரே சாக்குதான் நிதி மந்திரி சவானிலிருந்து விவசாய மந்திரி சிண்டேவரையிலும் திரும்பத் திரும்பச் சொல்லக் கூடிய சாக்காக உள்ளது. 25 ஆண்டுகளாக காங்கிரஸ் கட்சிதான் ஆளுகிறது. அதில் கடந்த 10 ஆண்டுகளாக தன்னிறைவு பற்றியே டமாரம் அடிக்கிறது.

மாபெரும் தொழில் முன்னேற்றம் உள்ள இந்தக் காலத்திலே — அண்ட வெளியில் ராக்கெட்டு விடும் காலத்திலேதான் பருவ காலம் தவறிவிட்டது என்று பருவகாலத்தைப் பற்றியே பாட்டு பாடிக் கொண்டிருக்கிறோம். இதைக் காட்டிலும் மானக் கேடு என்ன இருக்கிறது?

### கால் பங்குகூட பாசன வசதி இல்லை

இன்று நாட்டிலே சாகுபடிக்கு லாயக்கான நிலத்தில் முக்கால் வாசிக்குமேல் நீர்ப்பாசன வசதி இல்லை. 21 சதமான நிலங்களுக்குதான் பாசன வசதி செய்யப்பட்டிருக்கிறது.

முதலாளிகளுடைய பிடியிலிருந்தும், நிலப்பிரபுக்களுடைய பிடியிலிருந்தும் விவசாயிகளை, இந்த சர்க்கார் விடுவித்திருந்தால், அவர்களே நீர்ப்பாசன வசதிகளைச் செய்துகொண்டிருப்பார்கள். ஆனால் அரசாங்கத்தின் கொள்கைகளோ, நிலப்பிரபுக்களையும், இதர சுரண்டல் கூட்டங்களையும் பாதுகாப்பதில் கண்ணும் கருத்துமாக இருக்கிறது. அதனால்தான். சாகுபடிக்கு லாயக்கான நிலத்தில் முக்கால் வாசி பாசன வசதி இல்லாமற் கிடக்கிறது;

இந்தக் கொடுமையை மறைப்பதற்காகத்தான் பருவ மழைமீதே பழி போட்டு ஏமாற்றுகிறார்கள்.

மந்திரி சொன்னார் 12 கோடி டன்னைப் பிடிக்கப் போவதாக: அந்த அளவு பிடிக்க வேண்டாம். 10 கோடி டன்னையாவது எட்டிப் பிடித்து விட்டோம் என்று சொல்ல வேண்டாமா? அதுதான் இல்லை. காரணம் கதையே வேறு.

### எங்கும் பஞ்சம்

நாட்டின் உண்மை நிலை என்னவென்றால், முக்கால் வாசிநாடு, பஞ்சத்தால் பரதவிக்கின்றது. இந்தியாவிலுள்ள 340 மாவட்டங்களில் 227 மாவட்டங்களில் பஞ்சம் தலை விரித்து ஆடுகிறது. 56 கோடி மக்களில் 20 கோடி மக்கள் பஞ்சத்தால் பீடிக்கப்பட்டிருக்கிறார்கள். எந்த ஒரு மாநிலத்திலாவது பஞ்சம் இல்லை என்று மந்திரியால் சொல்ல முடியுமா?

ஆடுமாடுகளுக்கு தண்ணீர் இல்லை. பயிர் பச்சைகள்கருகிவிட்டன. மூட்டை முடுச்சுகளைத் தூக்கிக் கொண்டுஊரை விட்டு ஊர் கிளம்பிக் கொண்டிருக்கிறார்கள். குடிநீர் கூட இல்லை.

இந்தப்பஞ்சமும், வறட்சியுமே இந்த சர்க்காரின் கொள்கைகள் சூனியமாக உள்ளன என்பதற்கு எடுத்துக் காட்டுகளாகும்.

### பசுமைப் புரட்சியா? பஞ்சமும் வறட்சியா?

சென்ற ஆண்டு பசுமைப் புரட்சி பற்றி டாம்டாம் போட்டார்கள். இந்த ஆண்டு வாய்மூடிக் கிடக்கிறார்கள், பசுமைப் புரட்சிக்கு உரம் கொடுப்பதாகவும், உழுவடை இயந்திரங்கள் கொடுப்பதாகவும் சொன்னார்கள். கொடுக்கவும் செய்தார்கள்.

இந்தப் பசுமைப்புரட்சி பற்றி குமாரி பிராங்கல் என்பவர் ஒரு நூல் வெளியிட்டார். அந்த நூலுக்கு "இந்தியாவின் பசுமைப் புரட்சி"—என்று பெயர். அந்த அம்மையார் இந்தியாவிலுள்ள அமெரிக்க உதவிக் குழுவுக்கு ஆலோசகர் அவர் சொல்கிறார்.

"பசுமைப் புரட்சிக்காக இந்திய அரசு செய்த உதவியெல்லாம் 25 முதல் 30 ஏக்கர்வரை நிலம் வைத்திருக்கும் மிராசுதார்களுக்குதான் கிடைத்தது 10, 15 ஏக்கர் நிலம் உள்ளவர்களுக்கும் ஆதாயம் கிடைத்தது. ஆனால் 10 ஏக்கர் நிலத்தில் பயிரிடும் குத்தகை விவசாயிக்கு நியாயமான குத்தகைக்கு நிலம் கிடைக்காததால், அவர்களது பொருளாதார வாழ்க்கை நாசமாகிக் கொண்டிருக்கிறது. அரசு உதவி எதுவும் அவர்களுக்கு இல்லை"—என்று குறிப்பிட்டிருக்கிறார்.

இதுதான் உங்கள் பசுமைப்புரட்சியின் லட்சணம், இப்படியிருந்தால், பெரும்பாலான சிறு விவசாயிகள் தங்கள் நிலங்களை அபிவிருத்தி பண்ணமுடியுமா?

அதனால்தான் பஞ்சம கடுமையாகஉள்ளது: அதனால் தான் வறட்சி கொடுமையாக உள்ளது" — என்று அம்பலப்படுத்தினார்.

# மண்ணெண்ணெய் வினியோகம் கோரி மக்கள் ஆர்ப்பாட்டம்

ஆலத்தம்பாடி, ஏப். 29— திருத்துறைப்பூண்டி தாலுகா மாதர் சங்கம் —மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி விவசாய சங்கம், விவசாயத் தொழிலாளர் சங்கம் சார்பில் 500க்கு மேற்பட்ட ஆண்களும் பெண்களும் திருத்துறைப்பூண்டி தாலுக்கா உணவுவினியோக அதிகாரி முன் ஆர்ப்பாட்டம் செய்து மகஜர் சமர்ப்பித்தனர்.

ஆண்களைவிட பெண்களே ஊர்வலத்தில் கலந்து கொண்டார்கள் ஊர்வலம் உணவு வினியோக அதிகாரி அலுவலகம்வந்ததுமே. உணவு வினியோக அதிகாரி வெளியில்வந்து ஊர்வலத்தில் வந்தவர்களைப் பார்த்து விபரங்களை கேட்டு தெரிந்து கொண்டார். உடன் இது குறித்துதான் நடவடிக்கை எடுப்பதாகவும் கூறி மகஜரை பெற்றுக் கொண்டார்கள். நெல் அறுவை கூலி உயர்வை கண்டித்தும், வாரத்துக்கு கார்டுக்கு 2 லிட்டர் ம. எண்ணெய் வேண்டும் என்றும் நகரத்தில் வார்டுதோறும் ம. எண்ணெய் வினியோகம் செய்ய வேண்டும் என்றும். புதிதாக கார்டுகள் கோரி வருபவர்களுக்கு உடனே விசாரித்து புதிய கார்டுகள் வரவேண்டுமென்றும் கூறப்பட்டன. எல்லாவற்றையும் ஏற்றுக்கொண்டார்கள்.

தாலுக்கா கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் என். மணிமாறன், ஆர். கோவிந்தசாமி, விவசாய தொழிலாளர்சங்க சார்பில் நவேதையன் எஸ் கோபால் இளைஞர் முன்னணிசார்பில் தோழர் வி. ராமதாஸ் ஆகியவர்கள் கலந்து கொண்டு மகஜர் சமர்ப்பித்தனர்.

மண் எண்ணெய் கோரி, வேதாரண்யம் துணை தாசில்தார் அலுவலகம் முன்பு ஆர்பாட்டம நடத்தி மகஜர் அளித்தனர்.

### மக்களின் பாராட்டு

வேதாரண்யம் நகர சரித்திரத்தில் இப்படிப்பட்ட ஆர்ப்பாட்ட ஊர்வலம் சமீபத்தில் நடந்ததில்லை. கொளுத்தும் வெயிலில் பகல் 1 மணிக்கு 300க்கு மேற்பட்ட பெண்களும், 500க்கு மேற்பட்ட ஆண்களும் முக்கிய வீதிகள் வழியாக ஊர்வலமாக வந்து துணை தாசில்தார் அலுவலகம் முன்பு ஆர்ப்பாட்டம் செய்து, தோழர்கள் கே. தர்மலிங்கம் தாலுகா வி.ச. செயலர் ஆர். பழனிவேலு, நகரசெயலர் எம். பி. காளியப்பன், வி. பாலகிருஷ்ணன் ஆகியோர் மகஜர்களை சமர்ப்பித்து மண் எண்ணெய் கஷ்டங்களைபற்றி விளக்கி சொல்லி மகஜர்களை சமர்ப்பித்தார்கள்.

விபரங்களை கேட்டறிந்து உதவி தாசில்தார் எல்லா வித நடவடிக்கையும் எடுப்பதாக ஊர்வலத்தினர் மத்தியில் வந்து கூறினார்கள்.

இந்தப்பகுதிமக்கள் இந்த கோரிக்கையை எடுத்த மார்க்சிஸ்ட் கட்சியைப் பாராட்டி பேசிக்கொண்டிருக்கிறார்கள்.

# தஞ்சை காருகுடியில் மீண்டும் ரவுடிகள் தாக்குதல்

## திருவையாறு சப்இன்ஸ்பெக்டரின் தூண்டுதலா?

### போலீஸ் அதிகாரிகள் அலட்சியம் செய்வது ஏன்?

தஞ்சை, ஏப். 30— தஞ்சை வந்துள்ள ஹரிஜன நலத்துறை அமைச்சர் சத்தியவாணிமுத்து விடம் ஏப்ரல் 29—ல் விண்ணப்பம் சமர்ப்பிக்கவும். ஊர்வலம் ஆர்ப்பாட்டத்திற்கும் விவசாயிகளை திரட்டி அனுப்பிவிட்டு வந்த காருகுடி விவசாய சங்கத் தோழர் ராமலிங்கத்தை வரை அவ்வூரில் ஏற்கனவே தாக்குதல் தொடுத்த அதே ரவுடிகளும், நிலச்சுவான்தார்களும் சுமார் 30 பேர் சாலையில் 29—4—73 காலை சுமார் 7-30மணிக்கு மறித்து அடித்து துண்டை கழுத்தில் போட்டு உயிர்போகும் நிலையில் முறுக்கி தாக்கி இருக்கிறார்கள்.

### போலீஸ் உடந்தையா?

பெல்ட்டாலும், இன்னும் பல ஆயுதங்களாலும் கூட்டமாக நின்று தாக்கி இழுத்துப்போய் செருப்புமாலை போட்டு தெருவில் விட்டிருக்கிறார்கள் அங்கு காவல் புரியும் போலீசார் அதை அப்படியே பார்த்துக் கொண்டிருந்திருக்கிறார்கள் அன்று காலை 6 30 மணிக்கு அங்கு போன திருவையாறு போலீஸ்சப்-இன்ஸ்பெக்டர் ரவுடிகளுடன் ரகசியமாக பேசிவந்த பின்பே இந்த அநீதி நடந்திருக்கிறது. அமைச்சரிடம் பேசிக் கொண்டிருக்கும்போதே தகவல் கிடைத்ததால் மாவட்ட காவல்துறை அதிகாரியிடமும் அமைச்சரிடமும் அந்த கொடுஞ்செயலை விளக்கப்பட்டது உடன் நடவடிக்கை எடுப்பதாக கூறிய டி எஸ் பியும் ஸ்தலத்திற்கு மாலைவரை போகவில்லை. தாக்கப்பட்டவர் மீதே பொய்க்கேசு போடுவதற்கு முயற்சிநடக்கிறது.

தோழர் என் வெங்கடாசலம், அறிவுறுவோன். சுப்பையன், ரெத்தினம். பழனி மாணிக்கம். ஆகியோர் திருவையாறு போலீஸ் இன்ஸ்பெக்டரைக் கண்டு கேட்டதற்குஇப்போதுதான் தகவல் கிடைத்தது நடவடிக்கை எடுக்கிறேன்என்று மட்டும் தெரிவித்தார்; அதன் பின் ஊரில் சென்று விசாரிக்கும்போது காட்டுமிராண்டி காலத்தை நினைவுபடுத்தும் நிகழ்ச்சி நடந்திருக்கிறது என்பதை அறிந்தார்கள். அதன் பின் மீண்டும் காவல்துறை கண்காணிப்பாளர் அவர்களுக்கு அறிவிக்கப்பட்டிருக்கிறது. குற்றவாளிகளை கைது செய்யவோ. நடவடிக்கை எடுக்கவோ போலீஸ் தயங்குகிறது. காலை 7-30 மணிக்கு கடுமையாகத் தாக்கப்பட்டிருக்கும் ராமலிங்கத்தை மதியம் 3 மணி வரை மருத்துவமனைக்குகூட அனுப்பவில்லை. இப்போது அனுப்பினார்களா என்று தெரியவில்லை. இத்தகைய அநீதிகளுக்கும் போலீஸ் நடவடிக்கை கடுமையாக எடுக்க மறுப்பது மர்மமாக இருக்கிறது.

### எம். எல். ஏ.வின் உதவி

திட்டமிட்டுத் தாக்கும் ரவுடிகளை ஏதும் செய்யாமல் போலீசார் விட்டு வைப்பதுடன் சப் இன்ஸ்பெக்டரின் உற்சாகமும் கிடைப்பதால் இவ்வளவு பெரிய தாக்குதல் நடந்த சில தினத்தில் மீண்டும் தாக்குதல் தொடுத்திருக்கிறார்கள். வழக்கை இல்லாமல் செய்ய திருவையாறு தொகுதி சட்ட மன்ற உறுப்பினர் திரு. இளங்கோவன் முழு மூச்சாக ஈடுபட்டிருக்கிறாராம்.

தோழர் வெங்கடாசலம் திருவையாறு போலீஸ் இன்ஸ்பெக்டரிடம் நடவடிக்கை எடுக்காததை சுட்டிக் காட்டி இது நியாயமதானா என்று கேட்டபோது இப்போதே நடவடிக்கை எடுக்கிறேன் என்று கூறி இதுவரை ஒருவரைக் கூட கைது செய்யவில்லை,

தமிழக அரசே! திருவையாறு பகுதியில் உங்கள் கட்சி எம். எல். ஏ. வும், போலீசும் சேர்ந்து ஹரிஜன விவசாயத் தொழிலாளர் மீது 'யுத்தத்தையே" தொடங்கியுள்ளார்கள்.

மேலும் 26-4-73 மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி எதிர்ப்பு சாவ கட்சி கூட்டம் என்று திருவையாற்றில் ஒரு கூட்டம போட்டு அதில தி. மு. க. வினர் வன்முறையை மேலும் தூண்டும்முறையில் பேசி இருக்கிறார்கள். திமுகவினர் முன நின்று உயர்ஜாதிக் காரர்கள். நிலச் சுவான்களைப்படுத்தி வன்முறையில் ஈடுபட்டிருப்பனத எந்த ஜனநாயக உணர்வுள்ள சாதாரண மனிதனும் பொறுத்துக் கொள்ளமாட்டான். காவல்துறை சப் இன்ஸ்பெக்டர் இரவு பகலாக சதி வேலையில் ஈடுபட்டிருக்கிறார்.

திருவையாறு பகுதியில் அமைதி ஏற்படுத்த வேண்டுமானால் முதலில் திருவையாறு போலீஸ் சப் இன்ஸ்பெக்டரை மாற்றப்படுவது அவசியமாகும். தி மு க. வினர் இத்தகைய செயல்களுக்கு ஊக்கமளிப்பது அவர்களையே அழிக்கும் என்பதை உணருவது நல்லது நாகரீக அரசியலுக்கு சாவல் விடும் நிலையை தடுக்க தமிழக முதலமைச்சர் கவனம் செலுத்த வேண்டுகிறேன்.

## பஞ்சாலைத் தொழிலாளர்களுக்கு ஆதரவாக

# டில்லியில் பொது வேலைநிறுத்தம்

புதுடில்லி, மே. 1— கடந்த ஏப்ரல் 11-ந் தேதியிலிருந்து வேலை நிறுத்தம செய்துவரும் 27 ஆயிரம் டில்லி பஞ்சாலைத் தொழிலாளர்களுக்கு அனுதாபம் தெரிவிக்கும் முறையில், டில்லியில் மற்ற தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்களும் நேற்று (ஏப்ரல் 30) வேலை நிறுத்தம் செய்தனர்.

இந்தப் பொது வேலை நிறுத்தத்தை அடக்கி ஒடுக்குவதற்காக அரசாங்கம் போலீஸையும், குண்டர்களையும ஏவிவிட்டு வன்முறையாட்டத்தில் இறங்கியது.

பஞ்சாலைத் தொழிலாளர்களுக்கு ஆதரவாக மற்ற தொழிலாளர்களும் இவ்வளவு கட்டுப்பாடாக வேலை நிறுத்தம செய்தது ஆட்சியாளர்களுக்கு அதிர்ச்சியாகப் போய்விட்டது.

வலதுகம்யூனிஸ்டுகளின் துரோகத்தையும்முறியடித்து கோரிக்கை ஏற்கப்படும்வரை போராட டில்லிப் பஞ்சாலைகளில் வேலைசெய்யும் தொழிலாளர்கள் உறுதியாக உள்ளனர்.

பஞ்சாலைத் தொழிலாளர்களுக்கு ஆதரவாக மற்ற தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்களும் வேலை நிறுத்தம் செய்ய வேண்டும். என்று சி ஐ டி யூ வும் ஐக்கிய தொழிற்சங்க காங்கிரசும் அறைகூவல் விடுத்தன.

டில்லி நகரத்தில் தொழிலாளிவர்க்கத்தின் எழுச்சியைக்கண்டு பீதியுற்ற அரசாங்கம் எல்லா இடங்களிலும் போலீசை நிறுத்தி வைத்திருந்தது,

இந்தப் பொது வேலை நிறுத்தத்தையொட்டி 127 பேரைப போலீசார் கைது செய்தனர்,

நாராயணா என்ற இடத்திலுள்ள உணவுக் கார்ப்பரேஷன் கிட்டங்கி முன்னர் ஆர்ப்பாட்டம் செய்த தொழிலாளர்மீது உணவுக் கார்ப்பரேஷன் பாதுகாப்பு அதிகாரி சுட்டார்.

மற்றும் அரசாங்கா அச்சகத்தின் முன் ஆர்ப்பாட்டம் செய்த தொழிலாளர்கள் மீதும் அச்சகத்துக்குள் சிலர் ஒளிந்து கொண்டு துப்பாக்கியால் சுட்டனர், இதன் விளைவாக இருவர் காயமடைந்தனர் காயமடைந்தவர்களில் ஒருவர் நிலை கவலைக் கிடமாக உள்ளது,

மோடி நகரில் ஆர்ப்பாட்டமாகவந்த தொழிலாளர்கள் மீது குண்டர்கள் ஏவிவிடப்பட்டனா இந்தக் குண்டர்கள் தடியால்

(4-ஆம் பக்கம் பார்க்க)

# திண்டுக்கல் தொகுதி வாக்காளர்களே

# தீர்ப்புக் கூறுங்கள்

## சிண்டிக்கேடும் இண்டிக்கேடும் ஆண்ட 25 ஆண்டுகளில் வளர்ந்தது சோஷலிசமல்ல!

## 75 பெருமுதலாளிகளின் பகற்கொள்ளை பாரீர்!

**வறுமையின் எல்லையில் 27 கோடி கிராம மக்கள் நபர் ஒருவருக்கு சராசரி மாத வருமானம் ரூ. 18.**

—ரிசர்வ் பேங்க் அறிக்கை

**75 பெருமுதலாளிகள் 1963-ல் போட்ட மூலதனம் 646 கோடியே 50 லட்சம் அன்று அவர்களது ஆஸ்தி 2609 கோடியே 90 லட்சம் 1971-ல் ஆஸ்தி 6200 கோடி**

25 ஆண்டுகளாக இந்த நாட்டை ஆட்சி புரிந்த கட்சிகள் காமராஜரின் சிண்டிகேட் காங்கிரசும், இந்திரா காந்தியின் இண்டிகேட் காங்கிரசுமாகும.

இந்த இரு கட்சிகளும் ஒருவரை ஒருவர் தேர்தல் சமயத்தில் "நீ பிற்போக்கு. நீ சோஷலிச விரோதி" என்று ஏசிக் கொள்வதின் மூலம் ஏனேயோர் இவர்கள் சோஷலிசத்தின் பால் நம்பிக்கை உள்ளவர்கள் தானே எனச் சந்தேகம் கொள்ளும வாய்ப்பு ஏற்படுமல்லவா?

ஆங்கிலேயர் ஆட்சி காலத்தில்,

ஒருவர் லண்டனுக்குச் சென்று "பட்டம்" பெற்று வந்தால், "ஆகா இவர் லண்டனில் படித்தவர். அதி மேதாவி" என்று பாமர மக்கள் பேசுவார்கள்.

அதுபோல், காமராஜர் ஒரு சமயம் மாஸ்கோ விற்கு சென்று திரும்பியதின் மூலம் தன்னை ஒரு சோஷலிசவாதி போல ஊர் மக்கள் நம்பும்படியாக நடித்தார்.

இன்று இந்திராகாந்தி மாஸ்கோவுடன் உறவு வைத்திருப்பதைக் காட்டி, "இவர் ஒரு பெரிய சோஷலிஸ்ட்" இந்த நாட்டில் சோஷலிசத்தை அமுல் நடத்துபவர் என்ற எண்ணத்தை பரப்பி அதை, "ஓட்டு"களாக மாற்றிக் கொள்ள முயற்சிக்கின்றுர்கள்.

### எது சோஷலிசம்?

உலகம் முழுவதும் ஒப்புக்கொண்ட—இன்று சோசலிச உலகத்தில் அமுலில் உள்ள சோஷலிசமென்பது எது? அதன் அடிப்படை எது? அதன் பொருளாதார அஸ்திவாரம் எது?

மனிதனை மனிதன் சுரண்டுவதை—ஒருவர் உழைப்பை மற்றவர் திருடுவதை ஒழிப்பதே சோஷலிசம்.

இதற்கு ஆதாரமாக—உதவியாக—கருவியாக இருப்பது பொருள்களை உற்பத்தி செய்ய பயன்படும் உற்பத்தி சாதனங்கள்—நிலம், தொழிற்சாலைகள், யந்திரங்கள் மூலப்பொருள்கள் எல்லாம்.

இந்த சாதனங்கள் இன்று ஒரு சில வசதிக்காரர்கள் கையில், தனிநபர்கள் கையிலிருக்கின்றன நம் நாட்டில். ஆனல் சோஷலிசத்தை நிர்மாணித்துக்கொண்டுள்ள சோஷலிஸ்டுகளில் இவை சமுதாய உடைமைகளாகும். தேசிய உடைமைகளாகும்.

சுரண்டலை ஒழிக்க, வறுமையை அகற்ற, வேலையில்லாத் திண்டாட்டத்திற்கு முடிவு கட்ட. இதைத்தான். சோவியத் நாடும் செய்தது; நவசீனமும் செயதது; இன்னும் கியூபாவிலிருந்து வடகொரியா, வடவியட்நாம் வரை அனைத்து சோஷலிஸ நாடுகளும் செய்தன. தொழிலாளி வர்க்கத்தின் தலைமையில் அரசாங்கம் அமைந்ததால் இதை அவர்கள் செய்ய முடிந்தது. இதுதான் சோஷலிஸம்.

ஆனல்,

ஏமாற்றுவதையே தொழிலாகக் கொண்ட சிண்டிகேடும், இண்டிகேடும் சோஷலிஸம் என்ருல் இதுதான் என்ற உண்மையை மறைத்து வெறும் தோற்றத்திற்கு சோஷலிச வேடம் தரித்துக்கொண்டு கடந்த 25 ஆண்டுகளாக என்ன செய்தார்கள்?

டாட்டா
பிர்லா
கோயங்கா
மபத்லால்
வால்சந்த்
சிந்தியா
சாகுஜெயின்
சாராபாய்

போன்ற 75 பெருமுதலாளித்துவ பகாசூரர்களை வளர்த்து விட்டு சோஷலிஸத்தை வளர்ப்பதா சிறிது கூட வெட்கமில்லாமல் பேசுருர்கள்.

ஒரு சோஷலிஸ அமைப்பாக வளர்ந்திட எந்தப் பெரு முதலாளிகளின் கையிலுள்ள உற்பத்தி சாதனங்களை தேசிய உடைமையாக்க வேண்டுமோ அதே சாதனங்கள் தனிப்பட்ட நபர்களின் செல்வ வளர்ச்சிக்காக பயன்பட அனுமதித்தார்கள்.

இந்த விபரங்களை இந்திய அரசாங்கம் நியமித்த ஏகபோகக் கமிஷன் ஆராய்ந்து வெளியிட்ட விபரங்களே கூறுகின்றன.

### வறுமையின் எல்லையில் உள்ளோர்

இந்த 75 பெரு முதலாளிகளின் சொத்து அதன் வளர்ச்சி என்ன என்பதைக் கூறுவதற்கு முன்பாக, 55 கோடி மக்கள் தொகை உள்ள நாட்டில் வறுமையில் வாடுவோர் எண்ணிக்கையையும் வெளிவந்துள்ளது அது எத்தனை பேர் தெரியுமா?

கிராமப்புறத்தில் 27 கோடி மக்கள்!

இவர்களது சராசரி தனி நபர் மாத வருமானம் ரூ. 18 தான். இதுதான் வறுமையின் எல்லை என்று ரிசர்வ் பாங்க் அறிக்கை கூறுகிறது இது ஒரு புறம்.

★ **கே. முத்தையா** ★

மறுபுறத்தில் 75 பெருமுதலாளிகளின் பெயர்களும் அவர்களுடைய ஆஸ்தியின வளர்ச்சி விபரங்களையும் கீழே பாருங்கள்.

### 75 பேரின் அன்றைய ஆஸ்தி

1963-64ல் இந்த 75 பெரும் புள்ளிகளின் மொத்த ஆஸ்தி 2609 கோடியே 90 லட்சம்தான்.

இது உப்பிப் பெருத்தது பண்டிதநேரு, சாஸ்திரி. இந்திராகாந்தி ஆகியோர் ஒருவர் பின் ஒருவராக பிரதமர்களாக வீற்றிருந்தகாலம்.

திருவாளர் காமராஜ், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் பெருந் தலைவர்களில் ஒருவராக இருந்து, அதன் ஏகபோக பெருந்தலைவராக உயர்ந்த காலம் இது.

புவனேஸ்வரத்தில் தீர்மானம் தீட்டி சோஷசலிசம் எங்கள் லட்சியம் என பறை சாட்டி, அதை அமுல்படுத்தியே தீருவோம் எனப்பிரகடனப்படுத்திய காலம்—1963 லிருந்து 1967 வரையான அந்தக் காலகட்டத்தில்—டாட்டா. பிர்லா போன்ற 75 பெருமுதலாளிகளது ஆஸ்தி ரூ. 4032 கோடியே 40 லட்சமாக உயர்ந்தது. அதாவது, கிட்டத்தட்ட இரு மடங்காகப் பெருத்தது.

இதே ஆஸ்தி- இந்திராகாந்தி பதவிக்கு வந்த பிறகு சோஷலிசத்தை அமுல் நடத்த எனக்கு வாக்களியுங்கள்; என்னை ஆதரியுங்கள். நிஜலிங்கப்பா, காமராஜ், மொரார்ஜிதோாய், எஸ். கே. பட்டீல் ஆகியோர் தான் சோசலிசத்தின் எதிரிகள். நானும், சி. சுப்ரமணியமும், மோகன் குமாரமங்கலமும், சவானும் சேர்ந்து சோஷலிசத்தை அமுல் நடத்தப்போகிருேம் என்பதை பறை சாற்றி இண்டிகேட் காங்கிரஸ் என்று தனியாக பிளந்து. பதவியில் அமர்ந்தபிறகு. மேற்கூறிய இதே டாட்டா பிர்லா போன்ற 75 பெருமுதலாளிகளின் சொத்து குறைந்ததா? கரைந்ததா?

தேசவுடைமையாக்கப்பட்டதா?

இல்லை!
இல்லை!

மேலும் மேலும் பெருத்துக்கொண்டே போகிறது......

1967—68-ல் இந்திரா காந்தி பதவிக்கு வந்த சமயத்தில் மேற்கூறிய 75 திமிங்கிலங்களின் மொத்த ஆஸ்தி 4032 கோடியே 40 லட்சமாக இருந்த நிலையிலிருந்து—

### இன்று ரூ. 6200 கோடி

இன்று 1972—73-ல் (கம்பெனி விவகார அமைச்சர் டி. ஆர், சவான் தந்த விவரங்களின் படியே) 6200 கோடியாக உயர்ந்துவிட்டது.

அதாவது ஏகபோக முதலாளிகளின் ஆஸ்தி ஒவ்வொரு நான்காண்டுகளிலும் 200 சதவிகிதம் உயர்கிறது.

இவ்வாறு இவர்களது சொத்துக்களும், கம்பெனிகளும் பூதாகரமாகப் பெருத்துக்கொண்டே இருக்கும் அதே சமயத்தில், இவர்களது தொழில்களின்மூலம் இந்த நாட்டு மக்களுக்கு வேலை வாய்ப்பு அதிகரித்ததா? இல்லை. மாருக ஒவ்வொரு ஆண்டும் 7 சதவிகிதம் வேலை வாய்ப்பு குறைந்துகொண்டே வருகிறது. இதன் விளைவாக இன்று 3½ கோடி வாலிபர்கள் வேலையில்லாமல் தவிக்கிருர்கள்.

இந்தப் பெரு முதலாளிகள் திட்டமிட்டு வளர்க்கப்படும் விபரங்களை காணீர்.

முதல் 20 பெரும் திமிங்கலங்களின் ஆஸ்திகள் வளர்ந்த விபரத்தைக் காணீர்:

### முதல்வரிசையிலுள்ள 20 பெருமுதலாளிகள்

| பெருமுதலாளிகளின் பெயர் | | 1963-64-ல் போட்ட மூலதனம் | 1963-64-ல் மொத்தஆஸ்தி | 1967-68-ல் மொத்த ஆஸ்தி | 1970-71ல் மொத்த ஆஸ்தி | 8 ஆண்டுகளில் ஆஸ்தியின் உயர்வு |
|---|---|---|---|---|---|---|
| 1. டாட்டா | ரூ. | 102 கோடியே 31 லட்சம் | 417 கோடியே 72 லட்சம் | 584 கோடியே 63 லட்சம் | 711 கோடியே 15 லட்சம | 293 கோயே 43 லட்சம் |
| 2. பிர்லா | ,, | 76 கோடியே 34 லட்சம் | 292 கோடியே 72 லட்சம் | 475 கோடியே 60 லட்சம் | 687 கோடியே 38 லட்சம் | 394 கோடியே 66லட்சம் |
| 3. ஏ. சி. சி. | ,, | 24 கோடியே 23 லட்சம் | 77 கோடியே 36 லட்சம் | 105 கோடியே 84 லட்சம் | 127 கோடியே 85 லட்சம் | 50 கோடியே 49 லட்சம் |
| 4. ஆண்ட்ரூயூல் | ,, | 10 கோடியே 65 லட்சம் | 41 கோடியே 89 லட்சம் | 54 கோடியே 12 லட்சம் | 58 கோடியே 1 லட்சம் | 16 கோயே 12 லட்சம் |
| 5. பாங்கூர் | ,, | 19 கோடியே 68 லட்சம் | 77 கோடியே 91 லட்சம் | 124 கோடியே 88 லட்சம் | 149 கோடியே 70 லட்சம் | 71 கோயே 79 லட்சம |
| 6. பேல்டு ஷெய்லர்ஸ் | ,, | 14 கோடியே 92 லட்சம் | 60 கோடியே 10 லட்சம் | 78 கோடியே 62 லட்சம் | 84 கோடியே 69 லட்சம் | 24 கோடியே 59 லட்சம் |
| 7. கோயங்கா | ,, | 12 கோடியே 84 லட்சம் | 46 கோடியே 95 லட்சம் | 64 கோடியே 55 லட்சம் | 79 கோடியே 44 லட்சம் | 32 கோடியே 49 லட்சம் |
| 8. ஐ. சி. ஐ. (இம்பீரியல் கெமிக்கல் இண்டஸ்ட்ரீஸ்) | ,, | 9 கோடியே 41 லட்சம் | 36 கோடியே 89 லட்சம் | 51 கோடியே 11 லட்சம் | 118 கோடியே 55 லட்சம் | 81 கோடியே 66 லட்சம் |
| 9. ஜே. கே. சிங்கானியா | ,, | 14 கோடியே 19 லட்சம் | 59 கோடியே 20 லட்சம் | 78 கோடியே 75 லட்சம் | 113 கோடியே 30 லட்சம் | 54 கோடியே 10 லட்சம் |
| 10. கிலாட்சன் துளசிதாஸ் | ;, | 9 கோடியே 29 லட்சம் | 35 கோடியே 13 லட்சம் | 39 கோடியே 72 லட்சம் | 44 கோடியே 33 லட்சம் | 9 கோடியே 20 லட்சம் |
| 11. கில்லிக் கப்பாடியா | ,, | 15 கோடியே 59 லட்சம் | 41 கோடியே 50 லட்சம் | 62 கோடியே 10 லட்சம் | 84 கோடியே 57 லட்சம் | 43 கோடியே 7 லட்சம் |
| 12. மபட்லால் | ,, | 10 கோடியே 26 லட்சம் | 45 கோடியே 91 லட்சம் | 135 கோடியே 87 லட்சம் | 172 கோடியே 38 லட்சம் | 126 கோடியே 47 லட்சம் |
| 13. மார்டின் பேர்ன் | ,, | 22 கோடியே 28 லட்சம் | 149 கோடியே 61 லட்சம் | 174 கோடியே 29 லட்சம் | 173 கோடியே 13 லட்சம் | 23 கோடியே 52 லட்சம் |
| 14. சாகுஜெயின் | ,, | 19 கோடியே 62 லட்சம் | 67 கோடியே 69 லட்சம் | 79 கோடியே 68 லட்சம் | 96 கோடியே 18 லட்சம் | 18 கோடியே 49 லட்சம் |
| 15. சாராபாய் | ,, | 6 கோடியே 41 லட்சம் | 43 கோடியே 16 லட்சம் | 72 கோடியே 58 லட்சம் | 97 கோடியே 39 லட்சம் | 54 கோஷ்யே ! 23 லட்சம் |
| 16. சிந்தியா | ,, | 12 கோடியே 40 லட்சம் | 46 கோடியே 96 லட்சம் | 65 கோடியே 44 லட்சம் | 90 கோடியே 13 லட்சம் | 43 கோடியே 17 லட்சம் |
| 17. ஸ்ரீராம் | ,, | 9 கோடியே 59 லட்சம் | 54 கோடியே 68 லட்சம் | 107 கோடியே 41 லட்சம் | 137 கோடியே 6 லட்சம் | 82 கோடியே 38 லட்சம் |
| 18. சுராஜ்மல் நகர்மல் | ,, | 12 கோடியே 84 லட்சம் | 57 கோடியே 87 லட்சம் | 107 கோடியே 41 லட்சம் | (கணக்கு இன்னும் சமர்ப்பிக்க வில்லை) | (நான்காண்டில்) 49 கோடியே 34 லட்சம் |
| 19. தாபர் | ,, | 14 கோடியே 29 லட்சம் | 71 கோடியே 90 லட்சம் | 103 கோடியே 31 லட்சம் | 137 கோடியே 12 லட்சம் | 65 கோடியே 22 லட்சம் |
| 20. வால்சந்த் | ,, | 14 கோடியே 41 லட்சம் | 55 கோடியே 17 லட்சம் | 36 கோடியே 24 லட்சம் | 105 கோடியே 64 லட்சம் | 50 கோடியே 47 லட்சம் |

இந்த 20 பெருமுதலாளிகள் அல்லாமல், இந்திய நாடெங்கும் பலரகமான தொழில்களில் ஆதிக்கம் செலுத்தும் பெருமுதலாளிகளில் கஸ்தூரிபாய் லால்பாய், மக்னெயில் பாரி, ஜார்டைன் ஹெண்டர்சன், ஜெயதயாள் டால்மியா, பி. ஐ. சி., ஷாவாலஸ், பஜாஜ் மஹேந்திரா அண்ட் மஹேந்திரா, டர்னர் மாரீசன். இந்திரா சிங், கிர்லாஸ்கர், ரூயா, சப்பூர்ஜி பெல்லோன்ஜி, நவ்ரோஜி வாடியா, ஜெய்ப்பூரியா, சின்னுய், கட்டாவ் தக்கார்சே, ஜில்லாந்தர்ஸ்அர்புதநாத், காமனி, விசான்ஜி,மங்களதாஸ் பரேக், வாலஸ் அன் கம்பெனி, மோதி, பீ. என். எல்லிஸ், அமீன், பால்மர் லாவ்ரி, ராலீஸ், சுவிடிஸ் மேட்ச், சிரியான்ஸ் பிரசாத்ஜெயின், தாலுக்தார் லா, ஆர். கே. கனேரியா, பின்லே, போதர், மங்கள்தாஸ் ஜெய்சிங்பாய், கனேரியா பகிராத், ஜெ. பி. ஸ்ரீவத்சவா, ராம்குமார் அகர்வால், ஜேடியா, ஆர்.கே டால்மியா உட்பட 41 பெருமுதலாளிகள், தமிழ்நாடு உள்ளிட்டு இந்தியா முழுதும் எண்ணற்ற தொழிற்சாலைகளை ஏகபோக உடைமைகளாகப் பெற்று முக்கியமான பொருட்களின் உற்பத்தியில் ஆதிக்கம் செலுத்துகிருர்கள்.

இவர்கள் 1963—64-ல் போட்ட மூலதனம் 144 கோடி

அன்றைக்கு இருந்த இவர்களுடைய ஆஸ்தி 608 கோடி

1967—68-ல் இவர்களுடைய ஆஸ்தி 1079 கோடி ஆக உயர்ந்தது.

இந்த விபரங்களை வெளியிட இடம் போதாது. சராசரிக்கணக்கில், இந்த 75 பெருமுதலாளிகளும் 4 ஆண்டில் தமது ஆஸ்தியை 200 சதவீதம் உயர்த்தியுள்ளார்கள்

**(4-ஆம பக்கம பார்க்க)**

# திண்டுக்கல் தொகுதி வாக்காளர்களே...

(3-ஆம் பக்கத் தொடர்ச்சி)

என்ற உண்மையை அமைச்சர் டி.ஆர்.சவான் கொடுத்த புள்ளி விவரமே ஊர்ஜிதம் செய்கின்றது.

இந்த 41 பெரும் புள்ளிகளின் ஆஸ்தி 1967—68-ல் 1079 கோடி என்ருல்,

1970—71-ல் ரூ. 2158 கோடி ஆக உயர்ந்துள்ளது என்றுபொருள்.

(முதல் வரிசையில் நிற்கும், மேலே கூறப்பட்ட 20 பெரும் முதலாளிகளைத் தவிர ஏனையோரின் 67—71ம் ஆண்டுகளின் கணக்கு இன்னும் வெளியிடவில்லை.)

இதுதான், இந்திரா காந்தியும்—காமராஜரும் உருவாக்கிய 'சோசலிசத்தின்' லட்சணம்.

இவர்களது ஏஜெண்டுகளான சி. சுப்ரமண்யமும், மோஹன் குமாரமங்கலமும், ராமையாவும் திண்டுக்கல் தொகுதியில் தேர்தல் வேலைக்காக நூற்றுக்கணக்கான ஜீபகளையும், கார்களையும் கொண்டுவந்துள்ளனர், காங்கிரஸ் வெற்றிக்காகச் செலவிட பல லட்சக்கணக்கான ரூபாய்களை காங்கிரசார் மூட்டைக் கட்டிக்கொண்டு வந்து வைத்துள்ள பணம் யார் தந்தது? மேற்கூறிய பெருமுதலாளிகள் அளித்தபணம்.

## இந்திரா - காமராஜர் ஆட்சியில் வளர்க்கப்பட்டு கருணநிதி ஆட்சியில் மேலும் மேலும் பெருத்துவரும் தமிழ் நாட்டு ஏகபோக முதலாளிகள்

(இந்தியாவின் 75 ஏகபோக முதலாளிகளின் பட்டியலைச் சார்ந்தவர்கள்)

| தமிழ்நாட்டுப் பெரு முதலாளிகள் பெயர் | 1963-64ல் போட்ட மூலதனம் | 1963-64ல் ஆஸ்தி | 1967-68ல் ஆஸ்தி | நான்கே ஆண்டுகளில் ஆஸ்தி அதிகரிப்பு | போட்ட மூலதனத்தைப்போல் 4 ஆண்டுகளில் அடித்த கொள்ளை எத்தனைமடங்கு? |
|---|---|---|---|---|---|
| சேஷஷாயி | ரூ. 10 கோடியே 29 லட்சம் | 26 கோடியே 69 லட்சம் | 40 கோடியே 49 லட்சம் | 13 கோடியே 80 லட்சம் | 1¼ மடங்கு |
| டி. வி. எஸ். | ,, 4 கோடியே 48 லட்சம் | 21 கோடியே 87 லட்சம | 50 கோடியே 86 லட்சம் | 28 கோடியே 99 லட்ம் | 6½ மடங்கு |
| சிம்சன் | ,, 5 கோடியே 37 லட்சம் | 21 கோடியே 73 லட்சம் | 34 கோடியே 65 லட்சம் | 12 கோடியே 92 லட்சம் | 2½ மடங்கு |
| பின்னி | ,, 4 கோடியே 97 லட்சம் | 21 கோடியே 13 லட்சம் | (கணக்கு இன்னும்கொடுக்கப் படவில்லை) | — | — |
| ஜி. வெங்கடசாமிநாயுடு | ,, 8 கோடியே 11 லட்சம | 20 கோடியே 85 லட்சம | 26 கோடியே 52 லட்சம் | 5 கோடியே 67 லட்சம் | ¾ மடங்கு |
| ஸ்பாார்வி (ராஜா சர் முத்தையாசெட்டியார் ஆதிக்கத்தில் உள்ளது) | ,, 3 கோடியே 11 லட்சம் | 18 கோடியே 69 லட்சம் | 25 கோடியே 19 லட்சம் | 6 கோடியே 50 லட்சம் | 2 மடங்கு |
| தியாகராஜா (கருமுத்து தியாகராச செட்டியார்) | ,, 1 கோடியே 71 லட்சம் | 16 கோடியே 81 லட்சம் | 20 கோடியே 1 லட்சம் | 3 கோடியே 20 லட்சம் | ¾ மடங்கு |
| வி. ராமகிருஷ்ணு | ,, 2 கோடியே 75 லட்சம் | 13 கோடியே 61 லட்சம் | 23 கோடியே 95 லட்சம் | 10 கோடியே 34 லட்சம் | 4 மடங்கு |
| வி. ரங்கசாமிநாயுடு | ,, 6 கோடியே 62 லட்சம் | 12 கோடியே 94 லட்சம் | 22 கோடியே 98 லட்சம் | 10 கோடியே 4 லட்சம் | 1¾ மடங்கு |
| பாரி கம்பெனி | ,, 2 கோடியே 61 லட்சம் | 11 கோடியே 68 லட்சம் | 53 கோடியே 99 லட்சம் | 42 கோடியே 11 லட்சம் | 17 மடங்கு |
| டியூப் இன்வெஸ்ட்மெண்ட் | ,, 3 கோடியே 15 லட்சம் | 10 கோடியே 69 லட்சம் | 22 கோடியே 56 லட்சக் | 11 கோடியே 85 லட்சம் | 3½ மடங்கு |
| டி. சி. கோத்தாரி | ,, 3 கோடியே 68 லட்சம் | 8 கோடியே 82 லட்சம் | 11 கோடியே 88 லட்சம் | 3 கோடியே 6 லட்சம் | 1 மடங்கு |
| முத்தையாசெட்டியார் | ,, 2 கோடிய 43 லட்சம் | 6 கோடியே 89 லட்சம் | 9 கோடியே 95 லட்சம் | 2 கோடியே 86 லட்சம் | 1 மடங்கு |
| பியர்ஸ்லெஸ்லி | ,, 3 கோடியே 7 லட்சம் | 5 கோடி | 8 கோடியே 36 லட்சம் | 3 கோடியே 56 லட்சம் | 1½ மடங்கு |

மேலே தரப்பட்ட பட்டியலில் வரும் 14 பெரு முதலாளிகளின் 1967-ம் ஆண்டின் மொத்த ஆஸ்தி ரூ. 351.

1971 ல் முன்புதக்த விளக்கத்தின் படி 200 சதவிகிதம் அதிகரித்துள்ளது. அதாவது ரூ. 702கோடிஆகிறது.

மேலே கூறப்பட்டுள்ள நபர்கள் அல்லாமல் தமிழகத்தில் 'தினத்தந்தி, மாலைமுரசு, ராணிமுத்து, ராணி ஆகிய ஏடுகளையும், சங்ககிரி சிமெண்ட் தொழிற்சாலையில், ஏகபோக ஆதிக்கமும் சங்கர் சிமெண்டில் பெரும் பகுதி மூலதனத்தையும்' சன் பேப்பர் மில்லில் ஆதிக்கமும் புரியும், தி மு க அரசின், கூட்டுறவுத்துறை அமைச்சர் ஆதித்தனின் கணக்கு இதில் சேரவில்லை.

பாங்க் நிதி மூலதனத்தில் ஒரு பெரும் புள்ளியும், தூத்துக்குடி உரத் தொழிற்சாலையில் ஆதிக்கமும், இந்திரா காந்தியின் மகன்சஞ்சை காந்தி நடத்தும்மாருதி கார் தொழிற்சாலையில் பெரும் பங்கும் கொண்டுள்ள எம். ஏ. சிதம்பரம் செட்டியார், இந்திரா—காமராசர்— தி மு க ஆட்சியில் அடித்துள்ள கொள்ளைகளின் விவரங்கள் இதில் சேரவில்லை.

ஆரூரான் சர்க்கரை ஆலை, நிதி மூலதனம், கரும்புத் தோட்டங்களுடன் அரிசி வர்த்தகமும், செய்துவரும் நிலப்பிரபு வடபாதி மங்கலம் தியாகராசர் முதலியாரின் சொத்து விவரங்களை இந்திரா அரசோ, தி மு க அரசோ வெளியிடவில்லை.

மிகப்பெரும் லாரி சர்வீசும், சக்தி சுகர் மில்ஸும் டியூப் தொழிற்சாலையும வைத்திருப்பதுடன் மற்ற பல தொழில்களிலும் கொள்ளையடித்துவரும் பொள்ளாச்சி மகாலிங்கத்தின் சொத்து விவரங்கள் வெளியிடப்படவில்லை.

தி.மு.க. ஆட்சி பதவிக்கு வந்தபிறகு, கடந்தஆண்டு காலத்தில் எத்தனை சிறு முதலாளிகள் பெருமுதலாளிகளானார்கள் என்ற விவரங்கள் வெளியாகாவிடினும், எத்தனை முதலாளிகள் பெருத்துளளார்கள் என்பதற்கு மேற்கூறப்பட்டவை ஒரு சில உதாரணங்களாகும்.

இந்திரா காந்திக்கும், கருணநிதிக்கும், காமராஜருக்கும் திண்டுக்கல் தேர்தலுக்கு லட்சம லட்சமாக பணத்தைக் கொட்டித்தரும் கனவான்கள் இவர்கள் தான்.

இவர்களது பணப்புழக்கமும், கார்கள், ஜீப்கள் அதற்குத் தேவையான பெட்ரோல் சப்ளை முதலியவை மர்மமானவை,

காரணம் கறுப்புப் பணத்தின் இரகசிய ஏற்பாடுகளில் தோன்றுபவை இவை.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியோ, அ. தி.மு. க.வோ, ஏனைய ஜனநாயக கட்சிகளோ தேர்தலுக்காக மக்களிடம் வசூலிப்பதுபோல் மக்களிடம்அவர்கள் செல்லமாட்டார்கள். மக்களும் அவர்களுக்குத் தரமாட்டார்கள். மக்களிடம் இவர்கள் வசூலுக்குச் சென்ருலும் அது ஒப்புக்காகத்தான் இருக்கும்.

திண்டுக்கல் வாக்காளர்களே !

உங்களிடம் வாக்குக் கோரிவரும் இவர்களைப் பாருங்கள்.

அவர்களது ஆட்சிக் காலத்தில் வளர்ந்துள்ள பெருமுதலாளிகளின் மேற்கண்ட பட்டியலை காட்டுங்கள்!

இன்று அமுல் நடத்துவது சோசலிசமல்ல. மாருக டாட்டாயிசம், பிர்லாயிசம், வடபாதி மங்கலம் தியாகராஜ முதலியாரிசமாகும்.

உங்கள் முகத்தைக் காட்ட உங்களுக்கு வெட்கமில்லையா?

வந்த வழியே! திரும்பிச் செல்லுங்கள்!! என்று பதில் கூறுங்கள்.

இவர்களது போலி வேடத்தைக் கலைத்து வெளியேற்ற—இண்டிகேட்—தி. மு. க.—சிண்டிகேட் கட்சிகளின் அடக்குமுறைகளையும் தில்லுமுல்லு முதலாளித்துவ சேவைகளையும் முறியடிக்க—

அ. தி. மு. க. வேட்பாளருக்கு வாக்குகளை அளித்து அமோக வெற்றியினை ஈட்டித்தாரீர்!.

## எம். எல். ஏ. ஹாஸ்டலில் பெண்கள் புகாரை விசாரிக்க கமிட்டி நியமனம்

பம்பாய், ஏப். 30—

சட்டமன்ற உறுப்பினர்களுக்காக கட்டப்பட்டிருக்கும் விடுதியில்உள்ள அறைகள் தவருனகாரியங்களுக்கு பயன்படுத்தப் படுவதாகப் புகார் வந்துள்ளது. இந்த அறைகளிக்குள் பெண்கள் கொண்டு வரப்படுவதாகவும் புகார் வந்துள்ளது.

இந்த புகார்களை விசாரிக்க 9 பேர் அடங்கிய கமிட்டி ஒன்றை அரசாங்கம் நியமித்து அறிவித்துள்ளதாக அறிவித்துள்ளது.



## இடுக்கி தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்யத் தடை

### அவசரகால நிலைமை அதிகாரம் துஷ்பிரயோகம்

திருவனந்தபுரம், ஏப். 30—

இடுக்கி மின் திட்டத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்வதற்கு மத்திய அரசு தடை விதித்துள்ளது. அவசரகால நிலைமையின் கீழுள்ள அதிகாரங்களைத் தவருககபயன்படுத்தி மத்திய அரசு இந்த நடவடிக்கையை எடுத்துள்ளது.

பங்களா தேசப் போராட்டம் முடிந்து சிம்லா ஒப்பந்தம் ஏற்பட்ட பிறகும், அவசர கால நிலைமையை மத்திய அரசு திரும்பப் பெற மறுக்கிறது.

**தொழிலாளர்களுக்கு எதிராக...**

அவசரகால நிலைமையின் கீழுள்ள அதிகாரங்களைத் தொழிலாளர்களுக்கு எதிராகப் பயன்படுத்த மத்திய அரசு தயங்கவில்லை.

இடுக்கி திட்டத்தில் வேலை செய்யும் தொழிலாளர்கள் நியாயமான போனஸ் கோரிக்கையை முன் வைத்துள்ளார்கள்.

அணைக்கட்டு வேலையை மேற்கொண்டிருக்கும் இந்துஸ்தான் கன்ஸ்டிரக்ஷன் கம்பெனி இந்தக் கோரிக்கையை ஏற்க மறுப்பதால் தகராறு மூண்டுள்ளது.

இந்தத் தகராறில் தலையிட்டு நியாயமான தீர்வு காண்பதற்குப் பதில் அவசரகால நிலைமையின் கீழுள்ள அதிகாரத்தைப் பயன்படுத்தி மத்திய அரசு தொழிலாளர்களின் வேலை நிறுத்த உரிமையைப் பறித்துள்ளது.

## கல்லக்குறிச்சி வட்ட கட்டிடத் தொழிலாளர் ஆயிரம் பேர் ஆர்ப்பாட்டம்

தேவபாண்டலம், ஏப் 27—

சிமெண்டுபதுக்கலாலும், பற்ருக்குறையாலும் கட்டிடத் தொழிலாளர்கள் பெரிதும பாதிக்க பட்டுள்ளனர். வாரத்தில் இரண்டு அல்லது மூன்று நாள் வேலை கிடைப்பதே அரிது. அதிக வட்டிக்குக் கடன் வாங்கி அல்லல் படுகின்றனர். தங்கள் வாழ்க்கைக்கு அரசே பொறுப் பேறக வேண்டுமென கிளர்ந்தெழுந்தனர். இதுவரைஒன்றுபடாதிருந்த அவர்கள் ஒன்றுபட்டு தங்களிடையில் "கட்டிடத் தொழிலாளர்சங்கம்'என்று இந்த வட்டத்திலுள்ள ஒவ்வொரு ஊரிலும் சங்கம் வைத்தனர். தங்கள்கோரிக்கைகளை வற்புறுத்துவதற்காக 27—4—73 அன்று காலையில் இந்தவட்டத்தின் தலைநகரான கல்லக்குறிச்சியில் மாபெரும் ஆர்ப்பாட்டம் நடத்துவதென்று தீர்மானித்தார்கள்.

அதன்படி அன்று காலை பத்துமணிக்கு, கொத்தனுர் முதல சிற்ருள் வரைஆயிரத்துக்குக் அதிகமான பேர் கூடி உணர்ச்சிகரமான கோஷங்களை எழுப்பிக் கொண்டு நகர்முழுவதும் ஆர்ப்பாட்டம் செய்தனர். பிறகு தாசில்தார் அலுவலகத்துக்குச் சென்று தாசில்தாரிடம் தங்கள்கோரிக்கை மனுவைக் கொடுத்து அமைதியாகக் கலைந்தனர்.

அவர்களது உணர்ச்சிகரமான கோஷங்களாவன:

நாங்கள் வசதிக்குப் போராடவில்லை; வாழ்வுக்கு போராடுகிருேம்.

நாங்கள் கட்டிய மாளிகையில் நீங்கள் இருக்கையில்,நாங்கள்நடுத்தெருவில் தவிப்பதா ?

கள்ள மார்க்கெட்டுக் கொள்ளைக்காரனை சிறையில் தள்ளு—எங்களை வாழவிடு.

உழைப்பவனுக்கு வேலை கொடு; உலுத்தர்களுக்கு சிறையைக் கொடு.

சிமெண்ட் இல்லை! வேலையில்லை! கூலி இல்லை! சோறில்லை ! பொறுமையே இல்லை !

ஒன்றுபடுவோம் ! போராடுவோம் !! வெற்றிபெறுவோம் !!!

வேலையிழந்த எங்களுக்கு நிவாரணம் அளி.

தமிழகே அரசே ! நேர்மையான முறையில் சிமெண்டை வினியோகி.

ஆகியவை முக்கியமான கோஷங்களாகும்.

ஒரு மூட்டைசிமெண்டு ரூ. 35க்கும் கிடைப்பதில்லை அதனல் கட்டிடம் கட்டும் வேலைமுழுவதும் ஸ்தம்பித்துவிட்டது.

## டில்லியில்...

(2-ஆம் பக்கத் தொடர்ச்சி)

**தொழிலாளர்களைத் தாக்கியும இந்த வன்முறையைத் தடுக்க போலீஸ் நடவடிக்கை எடுக்கவில்லை.**

**மே தினக் கொண்டாடடத்துக்காக தொழிலாளர்கள அலங்காரம் செய்து வைத்திருந்த டந்தலையும குண்டர்கள தீ வைத்துக் கொளுத்தினர்**

**தொழிலாளர்களின்சைக்கிள்களையும குண்டர்கள் தீயில் போட்டு எரித்தனர்,**

**இதேமாதிரி பழைய டில்லி பகுதியிலும் தொழிலாளர் மீது குண்டர்கள் தாக்குதல் ஏவிவிடப்பட்டுள்ளது இந்தாகுதலில் ஏராளமான தொழிலாளர்கள் காயமடைந்தனர்.**

**ஒத்திவைப்பு பிரேரணை**

**இந்த சம்பவம் குறித்து விவாதிப்பதற்காக மற்ற அலுவல்களை ஒத்தி வைக்க வேண்டும் என்று கோரும ஒத்திவைப்புப் பிரேரணையை நாடாளுமன்றத்தில் ஏ. பி. வாஜ்பாயி கொண்டு வந்தார்.**

**டில்லியில் நிலைமை மிகவும் மோசமடைந்துள்ளது என்றும் டில்லிச் சம்பவங்கள் குறித்து உள்துறைஅமைச்சர் அறிக்கை வெளியிட வேண்டும என்றும் கோரினர்.**

**இந்தக் கோரிக்கையை பாாலிமெண்ட் விவகார அமைச்சர் கவனிப்பார் என்ற சபாநாயகர் ஆசனத்தில் வீற்றிருந்த கே. என். திவாரி அறிவித்தார்.**

## சம்பளக்குழு சிபாரிசுக்குக் கண்டனம் வேலூரில் ஆர்ப்பாட்டம்

வேலூர், மே. 1—

மூன்ருவது சம்பளக்குழுவின் பிற்போக்கான சிபாரிசுகளை எதிர்த்தும், 15-வது முக்கூட்டு மாநாட்டின்படி குறைந்தபட்ச ஊதியம், அரசு ஊழியர் அனைவருக்கும் போனஸ், கிராக்கிப்படியில் முழு நிவாரணம், முழு தொழிற்சங்க உரிமைகள் ஆகிய அடிப்படை கோரிக்கைகளை வலியுறுத்தியும் வேலூரில் ஏப் 28-ல் மத்திய அரசு ஊழியர்கள் ஆர்ப்பாட்ட ஊர்வலமும் நடத்தினர்கள்.

ஆர்ப்பாட்டம் காலையில் 10 மணிக்கு மேல் தலைமை அஞ்சலகம், வெளியூர்-உள்ளூர் தொலைபேசி நிலையங்கள் முன்பு நடைபெற்றது. மாலையில் ஊர்வலம் நடைபெற்றது. ஆர்ப்பாட்டத்திலும, ஊர்வலத்திலும் "பிற்போக்கான சம்பளக் குழு சிபாரிசுகளை—ஏற்க மாட்டோம்," என ஊழியர்கள் முழக்கமிட்டனர்.

ஊர்வலத்திற்குப் பின்னர் பொதுகூட்டம் மத்தியஅரசு ஊழியர் சங்கங்கள் இணைப்புக்குழு. துணைத் தலைவர் திரு ஆதிமூலம் தலைமையில் நடைபெற்றது. தலைமையுரைக்குப் பின்னர் இணைப்புக்குழுச் செயலர் திருகுப்புராஜுலு வரவேற்றுப் பேசினர். திரு மாணிக்கம் (ஆர். எம். எஸ் 3-ம் பிரிவு) கிருஷ்ணன் (லைன் ஸ்டாப் 4-ம் பிரிவு) இராகவன் (அஞ்சல் 3-ம்பிரிவு) பக்தவத்சலம் (தந்தி 4-ம் பிரிவு) இராசேந்திரன் (தொலைபேசி 3-ம் பிரிவு) அண்ணமலை (மாநில அமைப்புச் செயலர் தொலைபேசி 3-ம் பிரிவு தமிழ் மாநிலம்) சி. எஸ். பஞ்சாபகேசன் (சம்மேளனக் குழு உறுப்பினர் அஞ்சல் 3-ம் பிரிவு) வ. ஆ. மா. வட்ட சி. ஐ. டி. யூ. செயலர் வெ. கண்ணன் ஆகியோர் ஊழியர்களின் கோரிக்கைகளை வலியுறுத்திப் பேசினுர்கள்.

இணைப்புக் குழுப் பொருளாளர் திரு. பரமசிவன் நன்றி கூற "தொழிலாளர் ஒற்றுமை—ஓங்குக," என்ற முழக்கங்களுடன் கூட்டம் இனிதுமுடிந்தது.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில், [13' முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர், ஆசிரியர் கே. முத்தையா.

## இந்திரா காங்கிரஸ் தலைவர்களுக்கு நேற்று இனித்தது இன்று கசக்குதோ?

**"தி. மு. க. அரசு ஆசிரியர்களின் ஆதரவை இழந்துவிட்டது. உதய சூரியனைவிட்டால் யாருக்கு குத்தவது என்று யோசிக்கிருர்கள் :இந்த அக்கிரமங்களைத் தீர்த்துக்கட்ட யாருக்கு சக்தி இருக்கிறது? காமராஜருக்கு சக்தி இருக்கிறதா? அல்லது எம். ஜி ஆருக்கு சக்தி இருக்கிறத ?**

**எம். ஜி. ஆர். சபதம் எடுத்து இருக்கிருர் அது சினிமா சபதமாக போய்விடக்கூடாதே."**

**—மந்திரி சி. சுப்பிரமணியர், வத்தலக்குண்டில் பேசியது, "தினமலர்" ஏப்ரல் - 30**

∴ ∴ ∴

**"எம். ஜி. ஆர். கட்சிக்கு ஓடிப் போடுவது பாலைக் கொண்டுபோய் கட்டாந்தரையில் ஊற்றுவதற்குச் சமம்.**

**அ. தி. மு. க. வினர் மக்களின் அன்பை எல்லாம் குத்தகைக்கு எடுத்துவிட்டதாக எண்ணுகின்றனர். கட்சியின் திட்டங்களே இல்லாதவர்கள்."**

**—முன்னுள் மந்திரியும், இந்திரா காங்கிரஸ் தலைவருமான ஓ. வி. அளகேசன் மதுரையில் பேசியது. "மாலை முரசு" ஏப்ரல் - 30**

**குறிப்பு:—ஏனய்யா! மந்திரிமார்களே இந்திரா காங்கிரஸ்தலைவாகளே!நேற்றுவரை அ.தி.மு.க.வை சோத்துக்கொள்ள துடியாய்த் துடித்தவர்களே! உங்களுடைய அக்கிரமங்களுக்கெல்லாம் உதவி செய்ய அழைத்தவர்களே! இன்று அ தி.மு.க. வின் மீது பாய்வது ஏன்? உங்களுக்கு லாலி பாட மறுப்பதாலா?**

## அ. தி. மு. க.வேட்பாளருக்கு......

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

நகர்வாலா, ஊழல் முந்திரா ஊழல் ஆகியவற்றிற்கு காரணமான காங்கிரசுடன் அ.தி.மு.க. தொடர்பு வைத்துக்கொள்ளக் கூடாது என்று எடுத்துக் காட்டினேம். இந்த நிலைமையில் தான் மார்க்சிஸ்ட் கட்சி அதன் வேட்பாளரை அறிவித்தது.

அதற்குப் பின் காங்கிரசுடன் அ. தி.மு.க. கூட்டுச் சேராத நிலைமை ஏற்பட்டது. காங்கிரசுடன் அ. தி. மு. க. உறவு கொள்ளாமலிருந்தால் மட்டும் போதாது, எதிர்க்கவும் வேண்டும் என்று வற்புறுத்தினேம். இந்த நிலையில் தோழர் ராமமூர்த்தியும், எம். ஜி. ஆரும் சந்தித்துப் பேசியபின் எம். ஜி. ஆர். அறிக்கை விட்டிருப்பதின் பேரிலேயே அ. தி.மு.க.வை நாங்கள் ஆதரிக்கிருேம்.

**அ. தி. மு. க. வெற்றி உறுதி**

காங்கிரசை எதிர்க்க வேண்டும் என்பதே எங்கள் கொள்கை. காங்கிரசை எதிர்த்தால் வலது கம்யூனிஸ்ட் கட்சியைக்கூட நாங்கள் ஆதரிக்கத்தயார். காங்கிரசை ஆதரிப்பதால் தான் அவர்களை எதிர்க்கிருேமேயொழிய அவர்கள் மீது எங்களுக்கு வேறு வருத்தம் இல்லை.

இந்தத் கேர்தலில் அ. தி. மு. க. வேட்பாளரின் வெற்றிக்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தன்சொந்த வசதிகளை வைத்துக் கொண்டு முழுமூச்சுடன் பாடுபடும். அ. தி. மு. க. வேட்பாளரின் வெற்றி ஏற்கனவே உறுதியாகிவிட்டது"

**புரட்சிப் பாடல்**

கூட்ட ஆரம்பத்தில் குமார் குழுவைச் சேர்ந்த தோழர் டி. என். சங்கரும் மணவாளன் குழுவைச் சேர்ந்த தோழர் மகாலிங்கமும் புரட்சிப பாடல்கள் எழுச்சியுறப் பாடினுர்கள்.

திலகர் திடலில் நடந்த இப் பொதுக்கூட்டத்துக்கு மதுரை முகவை மாவட்ட சி. ஐ. டி. யூ. கவுன்சில் தலைவா தோழர் எம்., மீனுட்சி சுந்தரம் தலைமை வகித்தார். பஞ்சாலை தொழிலாளர் சங்க சார்பில் தோழர் ப. மு. குமார், மதுரை மாவட்ட ஐக்கிய கை நெசவுத் தொழிலாளர் சங்கம் சார்பில் தோழர். கே. அய்யாவு, பித்தளை பாத்திரத் தொழிலாளர் சங்க சார்பில் கே. கருப்பையா, தட்சிண ரயில்வே எம்ப்ளாயீஸ் யூனியன் சார்பில் தோழர் எஸ். ராமசாமி, நகராட்சி ஊழியர் சங்கம் சார்பில் தோழர் முரளீதரன், சைக்கிள் ரிக்ஷா தொழிலாளர் சங்கம் சாாபில் தோழர். பி. குண்டுமலை, மதுரை கைநெசவுத் தொழிலாளர் சங்கம் சார்பில் தோழர் ஜே. எஸ். கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் பேசினுர்கள்.

இக்கூட்டத்தில் சிந்தாமணி எம். ஜி. ஆர். மன்றத்தின் சார்பில் வியட்னும் நிதிக்கு ரூ 1 அளிக்கப்பட்டது.

## சோவியத் நாட்டில் இலவச எரிவாயு சப்ளை

**புதுடில்லி, மே. 1—**

**முதலாளித்துவ நாடுகளில் மண்ணெண்ணை போன்ற எரி பொருள்களை விலைக்கு வாங்குவதற்கு மக்கள் மணிக்கணக்கில் நீண்ட "கியூ"க்களில் நிற்க வேண்டிய காட்சிகளைப் பார்க்கிருேம்.**

**சோவியத் நாட்டில் வீடுகள் சமையல் செய்வதற்கும் மற்ற உபயோகங்களுக்கும் அனேகமாக இலவசம் என்று கூறத் தக்க விலையில் எரி வாயு சப்ளை செய்யப்படுகிறது.**

**ஒரு மாதத்துக்குத் தேவையான எரிவாயு சப்ளைக்கு 16 கோபக்ஸ் (இந்திய நாணய மதிப்பில் ரூ 1 பைசா 60) கட்டணம் மட்டுமே வசூலிக்கப்படுகிறது.**